கழக வெளியீடு : கருடுக

# கழகப்
# பழமொழி அகரவரிசை

இதன்கண்
**10,450** பழமொழிகள்
அடங்கியுள்ளன.

சு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. : : சென்னை-1.

சு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர் (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

# முன்னுரை

அறிவுத் துறைகளில் முற்போக்கடைந்த எல்லா நாடுகளிலும் நிகழும் நிகழ்ச்சிகளைக் கொண்டு, அவைகளால் உண்டாம் பயன்களைக் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் மக்கட்கு உணர்த்த எழுந்தனவே 'பழமொழிகள்' ஆகும்.

அவ்வாறே நம் தமிழ்நாட்டிலும் நம் தமிழ்மொழி விரிவுக்கேற்பப் பழமொழிகள் அளவுகடந்து பெருகி வழங்குகின்றன. வேறுபல நாடுகளிலும் அவ்வம் மொழியாளர்களால் பழமொழிகள் பல வழங்கிவருகின்றன. அந் நாட்டறிஞர் அப்பழமொழிகளையெல்லாம் ஒன்று திரட்டி நூல்வடிவில் வெளிப்படுத்தியுள்ளனர். ஆயினும் நம் நாட்டுப் பழமொழியளவு எண்ணிக்கையில் விரிந்து காணப்பெறவில்லை. அவை மிகச் சிற்றளவினவே.

இவ்வாறு விரிந்து பரவியுள்ள இப்பழமொழிகள் மக்கள் வாழ்க்கைக்கு வேண்டும் அறவுரைகள். இவைகளில் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் பொருள்கள் சிறந்து மாந்தர்க்கு நலம் பல பயப்பனவாக உள்ளன. ஒரு நாட்டின் பழக்க வழக்கங்கள் சாதி, சமயம், தொழில், அன்பு, பண்பு, காதல் முதலிய எல்லாவகைப் பாகுபாடுகளையும் கண்டறிதற்கேற்ற கருவி, பழமொழி என்றால் மிகையாகாது.

இத்தகைச் சிறப்புவாய்ந்த பழமொழிகள் எப்போது உண்டாயின; யாரால் உண்டாக்கப் பெற்றன என்று கூறுதற்கில்லை; புலமையுடையாரோ அல்லது உலகியல் அறிவு கொண்டாரோ இதனை ஆக்கினாரில்லை. தோட்டி முதல் தொண்டைமான் வரை அவரவர் தொழில், பழக்க வழக்கங்கள் கொண்டு அவ்வப்போது கூறியனவே பழமொழிகளாக அமைந்தன.

இவை இவ்வளவிற்றென்று கூறுதற்கொண்ணாது அளவு கடந்து வழங்குகின்றன. உயர்ந்தநிலையில் வாழ்வோர் அறியாத சிலபல பழமொழிகளை அவரினும் எளிய நிலையிலுள்ளவர்கள் தெரிந்து கூறுவர். ஆதலால் 'முற்றும் உணர்ந்தவர் இல்லை முழுவதூஉம், கற்றனம் என்று களியற்க' என்னும் முதுமொழி, இவைபோன்ற பழமொழி அறியாதாரை நோக்கி எழுந்ததோ வென்று ஐயமுறும்படியாகவும் உள்ளன. ஒருவன் நுண்ணியற் கலைகளையெல்லாம் கூட நூல்கள்மூலம் பயின்று கற்றுவிடலாம். இப்பழமொழிகள் மட்டும் முற்றக் கற்று முடிபு காண்டற்கில்லை. பழமொழிகள் தோன்றிப் பழமொழிகளாக மட்டும் அமையாது, அவ்வக்காலத்துக் கேற்றவாறு புதப்புது மொழிகளாக மாந்தர் களால் படைக்கப்பெற்று வழக்காற்றுக்கு வந்து, பழமொழிகளாகி வருகின்றன; வருவனவாக உள்ளன.

இப் பழமொழிகள் மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத் தோழன்போலப் பயன்பல நல்கும் பண்புடையனவாய்த் திகழ் கின்றன. அவை மக்கள் அறிவு விளக்கத்திற்குக் கண்போற் பய னுடையனவாக இருக்கின்றன. ஒருவனுக்கு அறிவு புகட்டப் பலப்பல பேசித் திருத்த முற்படுவதைவிடப் பழமொழியில் ஒன்று கூறி அறிவு தெருட்ட முற்பட்டால் அவனுக்கு இப்பழமொழிக் கருத்துகள் எளிதிற் பசுமரத்தாணிபோற்பதிந்து அவன் கருத்தைத் திருப்பி நல்வழிப்படுத்தும். எனவே, இவைகள் அவ்வளவு இயற் கைச் செப்பம் வாய்ந்த செம்மொழியாதல் நன்கு தெரிகின்றது.

ஒரு பழமொழியை உதாரணமாக எடுத்துக்கொள்வோம்; அதில் எவ்வளவு கருத்துச் செறிவு அமைந்திருக்கின்றது பார்மின்.

**'அகல இருந்தால் நிகள உறவு; கிட்ட இருந்தால் முட்டப்பகை'**

இஃதொரு பழமொழி. இஃது உறவினர் தன்மையைப்பற்றி எழுந்தது. இதன் கருத்து: அடிக்கடி நெருங்கிப் பழகினால் யாருக்கும் அவரவரைப் பற்றி மனத்தில் ஓர் அருவருப்பு எழுவ துண்டு; குணஞ்செயல், கொடுக்கல் வாங்கல் முதலியவைகளால் உயர்வுதாழ்வுகள் உண்டாதலும் உண்டு; பின்னர் இவைகளினால் பகைதோன்றி வளர்தலும் உண்டு. ஆதலால் யாரும் ஒருவர்க் கொருவர் பழகும்போது அவர்களுடன் மிக நெருங்காமலும், மிக்

விலகிப் போகாமலும் இடைப்பட்ட நிலையில் இருந்து பழகிவந்தால் அந்நட்பு என்றும் வளரும் என்பதை இப்பழமொழி நமக்கு அறிவுறுத்துகின்றது. இப்பழமொழி எவ்வளவு எளிதாகவும் அரிய பெரிய நீதிகளை உட்கொண்டதாகவும் இருக்கின்றது? இதனால் ஒருவன் வாழ்க்கையை எவ்வளவு செப்பமாக அமைத்து நடந்து கொள்வான்! இக்கருத்து திருக்குறட்பாக்கள் இரண்டில் அமைந்துள்ளதைக் காண்மின்.

> 'கேட்டினும் உண்டோர் உறுதி கிளைஞரை
> நீட்டி அளப்பதோர் கோல்.'

எனவும்,

> 'அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க
> இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.'

எனவும் வருதலால் அறியலாம். பிற பழமொழிகள் யாவும் இவ்வாறே அமைந்து பல்பொருள் நுணுக்கம் வாய்ந்தனவாகவே இலகுகின்றன.

இதன்கண் பயிர்த்தொழில் பற்றிய பழமொழிகள் மிகப் பல்கியிருக்கின்றன. பயிர்த்தொழில் பற்றிய பழமொழிகளை யெல்லாந் திரட்டி அரசினர் ஒரு நூல் வெளியிட்டிருப்பதாகத் தெரிகின்றது.

எனவே, இப்பழமொழிகளை யெல்லாம் இயன்றவளவு ஒன்று படுத்தி நூல்வடிவில் வெளியிட்டால் நலமெனச் சில அறிஞர் கருதினர். கருதிப் பன்னீராயிரத்துக்கு மேற்பட்ட சிலபல பழமொழிகளைத் திரட்டி 'பழமொழி அகராதி' என்னும் பெயர் கொடுத்து வெளியிட்டுள்ளனர். அவைகளுள் ஆத்திசூடி, கொன்றை வேந்தன் முதலிய சுவடிகளில் வந்துள்ள பாட்டுக்களையும், திருக்குறள் போன்ற நீதி நூல்களில் வந்துள்ள சொற்றொடர்களையும் சேர்த்து ஏற்றவாறு ஒவ்வோர் தொடராக்கிப் பழமொழியாக அமைத்துள்ளனர்.

பழமொழி யென்பது, நகை உவகை முதலிய மெய்ப்பாட்டுணர்ச்சிகளினால் பொதுமக்கள் மனம் உந்தப்பட்டு வெளிவருவனவேயன்றி நாமாக ஒரு கருத்தைக்கொண்டும் நூல்களிலுள்ள கருத்துக்களைத் தழுவித் திருத்தியும் கூட்டியும் புதுக்கியும் அமைப்பது பழமொழி ஆகாது.

ஆகவே, இவைகள் நாட்டு மக்கட்கு இன்றியமையாத தன்மையினாலும், இஃதொரு கலையாகப் பயன்பட வேண்டுமென்னும் கருத்தினாலும், மேற்கூறியவாறு பழமொழிகளோடு தொடர்பில்லாதவைகளை நீக்கி, மக்களால் எங்கும் இயற்கையாக வழங்கும் பழமொழிகளைத் தேர்ந்தெடுத்து, அவைகளின் பொருள் முடிபு முதலியவற்றையும் நன்கு கூர்த்தாராய்ந்து அமைத்து '**கழகப் பழமொழி அகரவரிசை**' என்னும் பெயர் கொடுத்துப் பதினாயிரத்து நானூற்றைம்பது பழமொழிகளைத் தொகுத்து வெளியிட்டுள்ளோம். விரிந்துகிடக்கின்ற பழமொழிகளில் ஓரளவே கிடைத்துள்ளனவற்றை வெளியிட முடிந்தது.

தமிழ்ப் பொதுமக்களும், கற்றுத்துறைபோய அறிஞர்களும், பல இடங்களிற் சென்று அனுபவம்பெற்ற பண்புடைமக்களும் ஆங்காங்கே தத்தமக்குத் தெரிந்த—இதில் வெளியிடப்பெறாத பழமொழிகளைத் தெரிந்து எழுதியனுப்புவார்களாயின், அஃது எமக்கோர் ஆதரவும் செய்யாமற் செய்த பெருநன்றியுமாகும். அதற்காக அவர்கட்கு நன்றிபாராட்டும் கடப்பாடுடையேம். அவைகளை அடுத்த பதிப்பில் சேர்த்தும், எமக்குக் காதுக்கு எட்டியவற்றை ஒன்றுபடுத்தியும் வெளியிடுவேம்.

ஆதலால், தமிழ்மக்கள் யாவரும் இத்தகைய நன்னூலை வாங்கிக் கற்று 'வெண்மையில்லை பல்கேள்வி மேவலால்' என்னும் தண்மொழிக்குச் சான்றாய் இலகுவார்களெனப் பெரிதும் நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

கழகப்

# பழமொழி அகரவரிசை



அகங்குளிர முகம் மலரும்
அகட விகடமாய்ப் பேசுகிறான்.
அகதிக்கு ஆகாசமே துணை.
அகதிக்குத் தெய்வமே துணை.
அகதி சொல் அம்பலம் ஏறாது.
அகதி தலையிற் பொழுது விடிந்தது.
அகதி பெறுவது பெண்பிள்ளை, அதுவும் வெள்ளி பூராடம்.
அகதியைப் பகுதி கேட்கிறதா?
அகத்தி ஆயிரம் காய்த்தாலும
10 அகத்தின் அழகு முகத்தில் தெரியும்.

அகத்துக் கழகு ஆமுடையாள்.
அகப்பட்டவனுக்கு அட்டமத்துச்சனி, ஓடிப்போனவனுக்கு ஒன்பதாம் இடத்து ராசா.
அகப்பட்டுக்கொள்வேன் என்றோ கள்ளன் களவெடுக்கிறது.
அகப்பை குறைந்தால் கொழுப்பெல்லாம் அடங்கும்.
அகப்பை பிடித்தவன் தன்னவனானால், அடிப்பந்தியில் இருந்தாலென்ன, கடைப்பந்தியில் இருந்தாலென்ன?
அகம் ஏறச் சுகம் ஏறும்.
அகம் மலிந்தால் அஞ்சும் மலியும், அகம் குறைந்தால் அஞ்சும் குறையும்.
அகம் மலிந்தால் எல்லாம் மலியும், அகம் குறைந்தால் எல்லாம் குறையும்.
அகல இருந்தால் நிகள உறவு, கிட்டவந்தால் முட்டப் பகை.
20 அகல இருந்தால் பகையும் உறவாம்.

அகல இருந்தால் புகல உறவு.
அகல இருந்து செடியைக் காக்கிறது.
அகல உழுகிறதைவிட ஆழ உழுகிறது மேல்.
அகல் வட்டம் பகல் மழை.
அகவிலை அறியாதவன் துக்கம் அறியான்.

அகழியிலே விழுந்த முதலைக்கு அதுவே வைகுண்டம்.
அகா நாக்காய்ப் பேசுகிறான்.
அகாரியத்தில் பகீரதப் பிரயத்தனம் பண்ணுகிறது.
அகிருத்தியம் செய்கிறவன் முகத்தில் விழிக்கிறதா?
30 அகிலுந் திகிலுமாக.
அகோர தபசி விபரீத சோரன் [நிபுணன்].
அக்கச்சி உடைமை அரிசி; தங்கச்சி உடைமை தவிடா?
அக்கரைப் பாகலுக்கு இக்கரைக் கொழுகொம்பு.
அக்கரை மாட்டுக்கு இக்கரை பச்சை.
அக்கறை தீர்ந்தால் அக்காள் *மொகுடு குக்கா.
அக்கன்னா அரியன்னா, நோக்குவந்த விதியென்ன?
அக்காடு வெட்டிப் பருத்தி விதைக்கிறேன் என்றால், அப்பா எனக்குத் துப்பட்டி என்கிறான் பிள்ளை; அதற்கு அப்பன் கைகால் பட்டுக் கிழியப்போகிறது மடித்துப் பெட்டியிலே வை என்கிறான்.
அக்காடு வெட்டிப் பருத்தி விதைத்தால், அப்பா சிற்றாடை என்கிறதாம் பெண்.
அக்காளைக் கொண்டால், தங்கையை முறைகேட்பானேன்?
40 அக்காளைப் பழித்துத் தங்கை (மோசம் போனாள்) அபசாரியானாள்.
அக்காள் இருக்கிறவரையில் மச்சான் உறவு.
அக்காள் உண்டானால், மச்சான் உண்டு.
அக்காள் உறவும் மச்சான் பகையுமா?
அக்காள்தான் கூடப்பிறந்தாள், மச்சானும் கூடப்பிறந்தானா?
அக்கியானம் தொலைந்தால் அவிழ்தம் பலிக்கும்.
அக்கிராரத்தில் பிறந்தாலும், நாய் வேதம் அறியுமா?
அக்கிராரத்துக்கு ஓர் ஆடு செத்தால் ஆளுக்கு ஒரு மயிர்.
அக்கிராரத்து நாய்க்கு அகவிலை தெரியுமா?
அக்கிராரத்து நாய் பிரதிட்டைக்கு அழுததுபோல.
50 அக்கினிதேவனுக்கு அபிடேகம் செய்தது போலிருக்கிறான்.
அக்கினிப் பந்தலிலே வெண்ணெய்ப் பதுமை ஆடுமா?
அக்கினி மலையிலே கர்ப்பூரபாணம் பிரயோகித்ததுபோல.
அக்கினியாற் சுட்ட புண் விடம் மிக்காது.
அக்கினியைத் தின்று கக்குகிற பிள்ளை, அல்லித்தண்டைத் தின்கிறது அதிசயமா?
அக்குத் தொக்கில்லாதவனுண்மையும், வெட்கஞ் சிக்கில்லாதான் தோட்டமும், மிக்கத் துக்கப்படாதான் வாழ்வும், நாய் கக்கி நக்கித் தின்னத்துக் கொக்கும்.

* கணவன் குக்கல்.

அக்குத் தொக்கு இல்லாதவனுக்குத் துக்கம் ஏது?
அங்கங்கு குறுணி அளந்துகொட்டி இருக்கிறது.
அங்கத்திலே குறைச்சலில்லை ஆட்டடா பூசாரி.
அங்கத்தை ஆற்றில் அலைசொணாதா?
60 அங்கத்தைக் கொண்டுபோய் ஆற்றில் அலைசினாலும் தோடம் இல்லை.

அங்கத்தைக் கொன்று ஆற்றில் சேர்க்கவொண்ணாது.
அங்காங்கு வைபோகமாயிருக்கிறான், இங்கே பார்த்தால் அரைக்காசு முதலும் இல்லை.
அங்காடிக்காரியைச் சங்கீதம் பாடச்சொன்னால், வெங்காயம் கறிவேப்பிலை என்பாள்.
அங்காடி மேயும் பழங்கன்று ஏருதலும் உண்டு.
அங்காடி விலையை அதிர அடிக்காதே.
அங்காளம்மைத் தெய்வம் அகப்பைக்கூறு வழியாய் வரும்.
அங்கிடு தொடுப்பிக்கு அங்கிரண்டு குட்டு, இங்கிரண்டு சொட்டு.
அங்கும் இருப்பான் இங்கும் இருப்பான், ஆக்கின சோற்றுக்குப் பங்கும் இருப்பான்.
அங்கும் தம்பி இங்கும் தம்பி அகப்பட்டுக் கொண்டான் தும்மட்டிப்பட்டன் (திம்மட்டிராயன்).
70 அங்கேண்டி மகளே கஞ்சிக்கு அழுகிறாய்? இங்குவாடி காற்றாய்ப் பறக்கலாம்.

அங்கே போனேனோ செத்தேனோ.
அசத்துக்கு வாழ்க்கைப்பட்டு ஆயிரம் வருடம் வாழ்வதை விட, சத்துக்கு வாழ்க்கைப்பட்டுச் சட்டென்று தாலியறுப்பதே மேல்.
அசலார் உடைமைக்குப் பேயாய்ப் பறக்கிறது.
அசலிலே பிறந்த கசுமாலம்.
அசலும் பிசலும் அறியாமல் அடுத்தாரைக் கெடுக்கப் பார்க்கிறான்.
அசல் வாழ்ந்தால் ஐந்துநாள் பட்டினி கிடப்பாள்.
அசல் வீடு வாழ்ந்தால் பரதேசம் போகிறதா?
அசல் வீட்டான் பிள்ளை ஆபத்துக்குதவுவானா?
அசல் வீட்டுக்காரனுக்குப் பரிந்துகொண்டு ஆமுடையானை அடித்தாளாம்.
80 அசல் வீட்டுக்குப் போகிற பாம்பைக் கையாலே பிடிக்கான்.

அசல் வீட்டுப் பிராமணா, பாம்பைப் பிடி, அல்லித் தண்டு போலக் குளிர்ந்திருக்கும்.
அசவாப் பயிரும், கண்டதே உறவும்.

அசுணமாச் செவிப் பறை அடுத்ததுபோலும்.
அசைந்து தின்கிறது மாடு, அசையாமல் தின்கிறது வீடு.
அசைப்புக்கு ஆயிரம்பொன் வாங்குகிறது.
அசைவிருந்தால் விட்டுப்போகமாட்டான்.
அச்சம் அற்றவன் அம்பலம் ஏறுவான்.
அச்சம் ஆண்மை குலைக்கும்.
அச்சாணி இல்லாத் தேர் முச்சாணும் ஓடாது.
90 அச்சிக்குப் போனாலும் அகப்பை அரைக்காசு.

அச்சியிலும் பிச்சைக்காரன் உண்டு.
அச்சியென்றால் உச்சி குளிருமா? அழுவணம் (ஐவணம்) என்றால் கை சிவக்குமா?
அச்சில்லாத் தேர் ஓடவும், ஆமுடையான் இல்லாதவள் பிள்ளை பெறவும் கூடுமா?
அச்சு ஒன்று வேறு?
அஞ்சலி வந்தனம் ஆருக்கும் நன்மை.
அஞ்சனக்காரன் முதுகில் வஞ்சனைக்காரன் ஏறினான்.
அஞ்சா நெஞ்சு படைத்தால் ஆருக்கு ஆவான்?
அஞ்சாவது பெண் கெஞ்சினாலும் கிடையாது.
அஞ்சி ஆண்மை செய்யவேணும்.
100 அஞ்சி நடக்கிறவனுக்குக் காலமல்ல.

அஞ்சிலே பிஞ்சிலே கொஞ்சாமல்,
அறுபதிற்குமேல் கொஞ்சினானாம்.
அஞ்சிலே விளையாதது ஐம்பதிலே விளையுமா?
அஞ்சில் அறியாதவன் ஐம்பதில் அறிவானா?
அஞ்சினவனைக் குஞ்சும் வெருட்டும்.
அஞ்சினவனைப் பேய் அடிக்கும்.
அஞ்சினவன் கண்ணுக்கு ஆகாசமெல்லாம் பேய்.
அஞ்சினாரைக் கெஞ்சுவிக்கும், அடித்தாரை வாழ்விக்கும்.
அஞ்சு கதவும் சாத்தியிருக்க,
ஆமுடையான் வாயிலே பேணவளார்?
அஞ்சு காசுக்குக் குதிரையும் வேண்டும், அதுவும் ஆற்றைக் கடக்கப் பாயவும் வேண்டும்.
110 அஞ்சு குஞ்சும் கறியாமோ, அறியாப் பெண்ணும் பெண்டாமோ?

அஞ்சுக்கு அறுகு கிள்ளப்போனவள், திரட்டிக்குக் கொண்டு வந்தாளாம்.
அஞ்சுக்கு இரண்டு பழுதில்லை.
அஞ்சு பணங் கொடுத்தாலும், அத்தனை ஆத்திரம் ஆகாது.
அஞ்சு பணங் கொடுத்துக் கஞ்சித்தண்ணீர் குடிப்பானேன்?

அஞ்சு பெண் பிறந்தால் அரசனும் ஆண்டியாவான்.
அஞ்சு பொன்னும் வாங்கார் அரைப்பணமே போதுமென் பார்.
அஞ்சும் இருக்கிறது நெஞ்சுக்குள்ளே, அதுவுமிருக்கிறது புந்திக்குள்ளே.
அஞ்சும் மூன்றும் உண்டானால், அறியாச் சிறுக்கியும் கறி யாக்குவாள்.
அஞ்சுரு ஆணியில்லாத் தேர் அசைவதரிது.
120 அஞ்சுருவித்தாலி நெஞ்சுருவக்கட்டிக்கொண்டு வந்தாற்போல் வலக்காரமாய்ப் பேசுகிறாய்.

அஞ்சுவயதுப் பிள்ளைக்கு ஐம்பதுவயதுப் பெண் கால் முடக்கவேண்டும்.
அஞ்சுவோரைக் கெஞ்சடிக்கப் பார்க்கிறான்.
அஞ்சூர்ச் சண்டை சிம்மாளம், ஐங்கல அரிசி ஒரு கவளம்.
அஞ்செழுத்தும் பாவனையும் அப்பனைப்போல் (அவனைப் போல்) இருக்கிறது.
அடக்கத்துப் பெண்ணுக்கு அழகேன்?
அடக்கமே பெண்ணுக்கு அழகு.
அடக்கம் ஆயிரம்பொன் தரும்.
அடக்கம் உடையார் அறிஞர், அடங்காதார் கல்லார்.
அடக்குவாரற்ற கழுக்காணி.
130 அடக்குவாரற்ற கழுக்காணியும் கொட்டுவாரற்ற மேளமு மாய்த் திரிகிறான்.

அடங்காத மனைவியும் ஆங்கார புருடனும்.
அடங்காப் [மாட்டுக்கு] பாம்பிற்கு ராசா மூங்கில் தடி.
அடங்காப்பிடாரியைப் பெண்டுவைத்துக்கொண்டதுபோல்.
அடங்காப் பெண்சாதியால் அத்தைக்கும் நமக்கும் பொல் லாப்பு.
அடங்கினபிடி பிடிக்கவேண்டுமே யல்லாமல், அடங்காப்பிடி பிடிக்கலாகாது.
அடம்பங்கொடியும் திரண்டால் மிடுக்கு.
அடர விதைத்து ஆழ உழு.
அடர்த்தியை அப்போதே பார் புளக்கத்தைப் பின்னாலே பார்.
அடா என்பான், வெளியே புறப்பட்டான்.
140 அடாது செய்தவன் படாது படுவான்.

அடி அதிரசம் (ஆலங்காய்), குத்து கொழுக்கட்டை.
அடி உதவுகிறதுபோல அண்ணன் தம்பி உதவார்.
அடி என்கிற மந்திரியுமில்லை பிடி என்கிற ராசனுமில்லை.
அடி ஒட்டலே கரணம்போடப் பார்க்கிறான்.

அடி ஓட்டையா யிருந்தாலும், கொழுக்கட்டை வேகவேண்டி யதுதானே.
அடிக்க அடிக்கப் பந்து அதிக விசைகொள்ளும்.
அடிக்காயிரம் பொன் கொடுக்கவேண்டும்.
அடிக்கிற காற்றுக்கும் பெய்கிற மழைக்கும் பயப்படு.
அடிக்கிற காற்று வெயிலுக்குப் பயப்படுமா ?
150 அடிக்கும் ஒரு கை, அணைக்கும் ஒரு கை.
அடிக்கும் காற்றிலே எடுத்துத் தூற்றவேண்டும்.
அடிக்கும் பிடிக்கும் சரி.
அடி செய்கிறது அண்ணன் தம்பி செய்யார்.
அடிச்சட்டிக்குள்ளே கரணம் போடலாமா ?
அடித்த இடம் கண்டுபிடித்தழ ஆறு மாசம் செல்லும்.
அடித்த எருக்கும் குடித்த கூழுக்கும் சரி.
அடித்தது ஆட்டம் பிடித்தது பெண்டு.
அடித்தாலும் புருடன், புடைத்தாலும் புருடன்.
அடித்துப் பழுத்ததும் பழமா ?
160 அடித்துப் பால் புகட்டுகிறதா ?
அடித்து வளர்க்காத பிள்ளையும், முறுக்கி வளர்க்காத மீசையும் செவ்வையாகா.
அடித்துவிட்டவன் பின்னே போனாலும், பிடித்துவிட்டவன் பின்னே போகலாகாது.
அடிநாக்கிலே நஞ்சும் நுனிநாக்கிலே அமிர்தமுமா ?
அடி நொச்சி நுனி ஆமணக்கா ?
அடிப்பானேன் பிடிப்பானேன் அடக்குகிற வழியில் அடக்குவோம்.
அடிமேல் அடி அடித்தால், அம்மியும் நகரும்.
அடிமை படைத்தால் ஆள்வது கடன்.
அடியற்ற பனைபோல் விழுந்தான்.
அடியற்ற மரம்போல அலறிவிழுகிறது.
170 அடியற்றால் நுனி விழாமலிருக்குமா ?
அடியாத மாடு படியாது.
அடியிலுள்ளது நடுவுக்கும் முடிக்கும் உண்டு.
அடியும் நுனியும் தறித்த கட்டைபோல.
அடியும் பட்டுப் புளித்த மாங்காயா தின்னவேண்டும் ?
அடியென்று அழைக்கப் பெண்டாட்டி இல்லை, பிள்ளை எத்தனை பெண் எத்தனை என்கிறான்.
அடியைப்பிடிடா பாரதபட்டா.
அடியொட்டி யல்லா மேற்கரணம் போடவேணும் ?
அடிவண்டிக் கிடாப்போல.

அடிவயிற்றிலே இடிவிழுந்தாற்போல.
180 அடிவானம் கறுத்தால், ஆண்டை வீடு வறுக்கும்.
அடுக்கல் குத்தினாள் நளுக்கல் குத்துவாள்.
அடுக்களைக் கிணற்றிலே அமுதம் எழுந்தாற்போல.
அடுக்களைக்கு ஒரு பெண்ணும், அம்பலத்துக்கு ஓர் ஆணும் இருக்கிறதென்கிறான்.
அடுக்களைக் குற்றம் திருப்பால் குழைந்தது, ஆமுடையான் குற்றம் பெண்ணாகப் பிறந்தது.
அடுக்களைப் பூனைபோல் இடுக்கிலே ஒளிக்கிறது.
அடுக்களைப் பெண்களுக்கு அழகுவேண்டுமா?
அடுக்குகிற அருமை உடைக்கிற நாய்க்குத் தெரியுமா?
அடுத்த கூரை வேவுங்கால் தன் கூரைக்கு மோசம்.
அடுத்ததன் தன்மை ஆன்மாவாகும்.
190 அடுத்தவரை அகல விடலாகாது.
அடுத்தவனைக் கெடுக்கலாமா?
அடுத்தவன் வாழ்வைப் பகலே குடி கெடுப்பான்.
அடுத்த வீட்டுக்காரனுக் கதிகாரம் வந்தால், அண்டை வீட்டுக் காரனுக்கு இரைச்சல் லாபம்.
அடுத்த வீட்டுக்காரனுக்கு அதியோகம் வந்தால், அண்டை வீடு குதிரை லாயம்.
அடுத்த வீட்டுக்காரி பிள்ளை பெற்றாளென்று அம்மிக் குழவி யெடுத்துக் குத்திக்கொண்டாளாம்.
அடுத்தாரைக் கெடுத்து அன்னம் இட்டாரைக் கன்னம் இடுகிறான்.
அடுத்து அடுத்துச் சொன்னால் தொடுத்த காரியம் முடியும்.
அடுத்துக் கெடுப்பான் கபடன், தொடுத்துக் கெடுப்பாள் மடந்தை.
அடுத்துமுயன்றாலும் ஆகும் நாள்தான் ஆகும்.
200 அடுத்து வந்தவர்க்கு ஆதரவு சொல்வோன் குரு.
அடுப்பனலில் வெண்ணெயை வைத்த கதை.
அடுப்பு எரிந்தால் பொரி பொரியும்.
அடுப்புக் கட்டிக்கு அழகு வேண்டுமா?
அடுப்பு நெருப்பும் போய், வாய்த்தவிடும் போச்சு.
அடே அத்தான், அத்தான், அம்மான் பண்ணினாற் போலிருக்கவில்லை அடா.
அடைத்தவன் காட்டைப் பார், மேய்த்தவன் மாட்டைப் பார்.
அடைந்தோரை ஆதரி.
அடைபட்டுக் கிடக்கிறான் செட்டி, அவனை அழைத்து வா பணம்பாக்கி என்கிறான் பட்டி.

அடைப்பைப் பிடுங்கினால் பாம்பு கடிக்கும்.
210 அடைமழைக்குள்ளே ஓர் ஆட்டுக்குட்டி செத்ததுபோல.
அடைமழை விட்டும் செடிமழை விடவில்லை.
அடையலரை அடுத்து வெல்லு.
அட்ட தரித்திரம் [ஆத்தாள்] தாய் வீடு, அதிலும் தரித்திரம் மாமியார் வீடு.
அட்ட தரித்திரம் பிடித்தவன் அமராவதியில் வாழ்கிறானென்று நித்திய தரித்திரம் பிடித்தவன் நின்றநிலையிலே பிட்டுக்கொண்டு வந்தான்.
அட்டமத்துச் சனி கிட்டவந்ததுபோல.
அட்டமத்துச் சனி நட்டம் வரச்செய்யும்.
அட்டமத்துச் சனி பிடித்தது, பிட்டத்துத் துணியையும் உரிந்துகொண்டது.
அட்டமத்துச் சனியை வட்டிக்கு வாங்கினாற்போல.
அட்டாதுட்டி கொள்ளித்தேள்.
220 அட்டைக்கும் திருத்தியில்லை, அக்கினிக்கும் திருத்தியில்லை.
அட்டையை எடுத்து மெத்தையில் வைத்தாலும் செத்தையைச் செத்தையை நாடும்.
அட்டையைப் பிடித்து மெத்தையில் வைத்ததுபோல.
அணி பூண்ட நாய்போல.
அணியத்திலே கிழிஞ்சாலும் கிழிஞ்சுது, அமரத்திலே கிழிஞ்சாலும் கிழிஞ்சுது.
அணியெல்லாம் ஆடையின்பின்.
அணில் ஊனும், ஆமை நடையும்.
அணில் ஏறவிட்ட நாய் (பார்ப்பது) போல.
அணில் கொப்பிலும், ஆமை கிணற்றிலும்.
அணில் நொட்டினதும் தென்னமரம் வீழ்ந்ததும்.
230 அணிற்பிள்ளைக்கு நுங்கு அரிதோ, ஆண்டிச்சிபிள்ளைக்குச் சோறு அரிதோ?
அணு மகாமேரு ஆமா?
அணுவும் மலையாச்சு, மலையும் அணுவாச்சு.
அணை கடந்த வெள்ளத்தை மறிப்பவர் ஆர்?
அணை கடந்த வெள்ளம் அழுதாலும் வராது.
அண்டங்காக்காய் குழறுகிறாப்போல.
அண்டத்தில் இல்லாததும் பிண்டத்தில் உண்டா?
அண்டத்திற்கு உள்ளது பிண்டத்திற்கும் உண்டு.
அண்டத்துக்கொத்தது பிண்டத்துக்கு.
அண்டத்தைக் கையில் வைத்தாட்டும் பிடாரிக்குச் சுண்டைக்காய் எடுப்பது பாரமா?
240 அண்டத்தைச் சுமக்கிறவனுக்குச் சுண்டைக்காய் பாரமா?

அண்ட நிழலில்லாமற்போனாலும், பேர் ஆலமரம்.
அண்டமும் பிண்டமும், அந்தரங்கமும் வெளியரங்கமும்.
அண்டர் எப்படியோ தொண்டரும் அப்படியே.
அண்டாத பிடாரி ஆருக்கு அடங்குவாள்.
அண்டை அயல் பார்த்துப் பேசுகிறது.
அண்டையிற் சமர்த்தன் இல்லாத ராசாவுக்கு அபகீர்த்தி வரும்.
அண்டைவீட்டுக் கடனும் பிட்டத்துச் சிரங்கும் ஆகாது.
அண்டைவீட்டுக்காரி பிள்ளை பெற்றாளென்று அயல்வீட்டுக்காரி இடித்துக் கொண்டதுபோல.
அண்டை வீட்டுச் சண்டை கண்ணுக்குக் குளிர்ச்சி.
250 அண்டை வீட்டுச் சுப்பிக்கும் எதிர்வீட்டுக் காமாட்சிக்குமா கவலை.

அண்டை வீட்டுப் பார்ப்பான் சண்டை மூட்டித் தீர்ப்பான்.
அண்ணற ஆயிரம் பொன்னிலும் நிண்ணற ஒருகாசு பெரிது.
அண்ணனார் சேனையிலே அள்ளி உண்ணப்போகிறாள்.
அண்ணனிடத்தில் ஆறுமாதம் வாழ்ந்தாலும் அண்ணியிடத்தில் அரை நாழிகை வாழலாமா?
அண்ணனுக்குத் தம்பி அல்லவென்று போகுமா?
அண்ணனுக்குப் பெண் பிறந்தால் அத்தை அயல் நாட்டாள்.
அண்ணனைக் கொன்றபழி, சந்தையிலே தீர்த்துக்கொள்ளுகிறதுபோல.
அண்ணன் உண்ணாதது எல்லாம் மைத்துனிக்கு லாபம்.
அண்ணன் கொம்பு பம்பள பளாச்சு.
260 அண்ணன் சம்பாதிக்கிறது, தம்பி அரைஞாண் கயிற்றுக்குச் சரி.

அண்ணன்தம்பிதான் சென்மப் பகையாளி.
அண்ணன் தம்பி வேண்டும் இன்னம் தம்பிரானே.
அண்ணன்தான் கூடப் பிறந்தான் அண்ணியும் கூடப் பிறந்தாளோ?
அண்ணன் பெரியவன், அப்பா காலைப்பிடி.
அண்ணன் பெரியவன், சிற்றப்பா, சுருட்டுக்கு நெருப்புக் கொண்டுவா.
அண்ணன்பேரிலிருந்த கோபத்தை நாய்பேரி லாற்றினான்.
அண்ணாக்கும் தொண்டையும் அதிர அடைத்தது.
அண்ணாணங்கை அப்ஸரஸ்திரீ.
அண்ணாண்டி வாரும், சண்டையை ஒப்புக்கொள்ளும்.
270 அண்ணாமலையாருக்கு அறுபத்துநாலு பூசை, ஆண்டிகளுக்கு எழுபத்துநாலு பூசை.

அந்தி ஈசல் பூத்தால் அடைமழை அதிகரிக்கும்.
அந்திப் பீ சந்திப் பீ பேலாதான் வாழ்க்கை, சாமப் பீ தட்டி எழுப்பும்.
அந்திமழை அழுதாலும் விடாது.
அந்திக்கண்ணிக்கு அழுதாலும் வாராளும் ஆமுடையான்.
அந்தாது நெல்லானேன்.
அபத்த பஞ்சாங்கத்துக்கு அறுபது நாழியும் தியாச்சியம்.
அபிடேகம் இட்ட கைக்குச் சுழிக்குற்றம் உண்டா?
340 அப்பச்சி குதம்பையைச் சூப்பப் பிள்ளை முற்றின தேங் காய்க்கு அழுகிறது போல.

அப்பச்சி கோவணத்தைப் பருந்துகொண் டோடுகிறது, பிள்ளை வீரவாளிப் பட்டுக்கு அழுகிறது.
அப்பத்தை எப்படிச் சுட்டாளோ, தித்திப்பை எப்படி நுழைத்தாளோ?
அப்பம் என்றூற் பிட்டுக் காட்ட வேண்டுமா?
அப்பம் சுட்டது சட்டியில், அவல் இடித்தது திட்டையில்.
அப்பம் சுட்டது திட்டையிலே, அவல் இடித்தது சட்டி யிலே.
அப்பனோடே போகிறவளுக்கு அண்ணன் ஏது தம்பி ஏது?
அப்பன் அருமை அப்பன் மாண்டால் தெரியும், உப்பின் அருமை உப்பு இல்லாவிட்டால் தெரியும்.
அப்பன் செத்தும் தம்பிக் கழுகிறதா?
அப்பன் சோறறுக் கழுகிறுன், பிள்ளை கும்பகோணத்தில் கோதானம் செய்கிறுன்.
350 அப்பன் பெரியவன், சிற்றப்பா, சுருட்டுக்கு நெருப்புக் கொண்டுவா.

அப்பா அப்பா என்றுல் ரங்கா ரங்கா என்பான்.
அப்பா என்றுல் உச்சி குளிருமா?
அப்பாஜி உப்பில்லை.
அப்பிடாவு மில்லை வெட்டுக் கத்தியு மில்லை.
அப்பியாசம் குலவிருது.
அப்பியாசம் கூசாவித்தை.
அப்பியாச வித்தைக்கு அழிவில்லை.
அமரபட்சம் பூர்வபட்சம், கிருட்ணபட்சம் சுக்கிலபட்சம்.
அமரிக்கை ஆயிரம் பெறும்.
360 அமர்த்தனுக்கும் காணிவேண்டாம்; சமர்த்தனுக்கும் காணி வேண்டாம்.

அமாவாசைக் கருக்கலிலே பெருச்சாளி போனதெல்லாம் வழி.

அமாவாசைச் சோறு சும்மா அகப்படுமா ?
அமாவாசைப் பருக்கை என்றைக்கும் அகப்படுமா ?
அமிஞ்சி உண்டோ, குப்புநாயக்கரே.
அமிஞ்சிக்கு உழுதால் சரியாய் விளையுமா ?
அமுக்கிணற் போலிருந்து அரணை அழிப்பான்.
அமுதம் உண்கிற வாயால் விடம் உண்பார்களா ?
அமுதுபடி பூச்சியம், ஆடம்பரம் அதிகம்.
அமைச்சனில்லாத அரசும், ஆமுடையானில்லாத ஆரிழையும்.
370 அம்பட்டக் கிருதும், வண்ணார ஒயிலும்.
அம்பட்டனை மந்திரித் தனத்துக்கு வைத்துக்கொண்டது போல.
அம்பட்டன் குப்பையைக் கிளறினால் மயிர் மயிராய்ப் புறப்படும்.
அம்பட்டன் கைக் கண்ணாடி போல.
அம்பட்டன் பல்லக் கேறினது போல.
அம்பட்டன் பிள்ளைக்கு மயிர் அருமையா ?
அம்பட்டன் மாப்பிள்ளைக்கு மீசை ஒதுக்கினது போல.
அம்பலக் கழுதை அம்பலத்திற் கிடந்தாலென்ன, அடுத்த திருமாளிகையிற் (திருமாளத்திற்) கிடந்தாலென்ன ?
அம்பலத்தில் ஏறும் பேச்சை அடக்கம் பண்ணப் பார்க்கிறான்.
அம்பலத்தில் கட்டுச் சோறு அவிழ்த்தாற் போல.
380 அம்பலத்தில் பொதி அவிழ்க்கலாகாது.
அம்பலம் வேகுது.
அம்பாணி தைத்தது போலப் பேசுகிறான்.
அம்பாத்தூர் வேளாண்மை யானைகட்டத் தாழ்வான மட்டும் போர், ஆறுகொண்டது பாதி தூறு கொண்டது பாதி.
அம்பா பாக்கியம் சம்பா விளைந்தது, பாவிபாக்கியம் பதராய் விளைந்தது.
அம்பிகொண்டு ஆறுகடப்போர் நம்பிக்கொண்டு நரிவால் கொள்ளுவார்களா ?
அம்மண தேசத்தில் கோவணங் கட்டினவன் பைத்தியக்காரன்.
அம்மணமும் இன்னலும் ஆயுசு பரியந்தமா ?
அம்மா குதிர்போல, ஐயா கதிர் போல.
அம்மா கெட்ட கேட்டுக்கு முக்காடு ஒன்று ?
390 அம்மா தெருளுவதற்கு முன்னே ஐயா உருளுவார்.
அம்மாளுக்குத் தமிழ் தெரியாது, ஐயாவுக்கு வடுகு தெரியாது.

அம்மானும் மருமகனும் ஒரு வீட்டுக்கு ஆள் அடிமை.
அம்மான் மகளுக்கு முறையா?
அம்மான் வீட்டு வெள்ளாட்டியை அடிக்க அதிகாரியைக் கேட்கவேண்டுமா?
அம்மி மிடுக்கோ அரைப்பவள் மிடுக்கோ?
அம்மி மிதித்து அருந்ததி பார்த்தது போலப் பேசுகிறாள்.
அம்மி யிருந்து அரணை அழிப்பான்.
அம்மியும் குழவியும் ஆகாயத்தில் பறக்கச்சே, எச்சிற் கல்லை எனக்கு என்ன கதி என்றாற் போல.
அம்மியும் குழவியும் ஆடிக்காற்றில் பறக்கச்சே, இலவம் பஞ்சு எனக்கென்ன கதி என்றதாம்.
400 அம்முக்கள்ளி ஆடையைத் தின்றால் வெண்ணெய் உண்டா?
அம்மை குத்தினாலும் பொம்மை குத்தினாலும் வேண்டிய [illegible]
அம்மைக் கமர்க்களம் ஆக்கிப்படை, எனக் கமர்க்களம் பொங்கிப்படை.
அம்மைக்கு அமர்க்களம் பொங்கிப் படையுங்கள்.
அம்மையாரே வாரும், கிழவனைக் கொள்ளும்.
அம்மையார் எப்பொழுது சாவார், கம்பளி எப்பொழுது நமக்கு மிச்சமாகும்?
அம்மையார்க்கு என்ன துக்கம், கந்தைத் துக்கம்.
அம்மையார் நூற்கிற நூலுக்கும், பேரன் அரைஞாண் கயிற்றுக்கும் சரி.
அம்மையார் பெறுவது அரைக்காசு, அவருக்குத் தலைசிரைக்க முக்காற்காசு.
அம்மை வீட்டுத் தெய்வம் நம்மைவிட்டுப் போமா?
410 அயலார் உடைமைக்குப் பேயாய்ப் பறக்கிறான்.
அயலார் உடைமையில் அந்தகன்போல் இரு.
அயலான் வாழப் பகலே சரக்கெடுப்பது.
அயல் வீட்டான் பிள்ளை ஆபத்துக் குதவுவானா?
அயல் வீட்டு நெய்யே, என் பெண்டாட்டி கையே.
அயன் இட்ட எழுத்தில் அணுவளவும் தப்பாது.
அயன் இட்ட கணக்கு ஆருக்கும் தப்பாது.
அயன் சமைப்பை ஆராலும் தள்ளக்கூடாது.
அயிரையும் சற்றே அருக்குமாம், பிட்டுக்குள் போட்டுப் பிசறாமல்.
அயோக்கியர் அழகு அபரஞ்சிச் சிமிழில் நஞ்சு.
420 அய்யன் அளந்தபடி.

அய்யா, அய்யா, அம்மா குறைக் கேழ்வரகும் அரைக்கவரச் சொன்னாள்.
அய்யாசாமிக்குக் கலியாணம், அவரவர் வீட்டிலே சாப்பாடு.
அய்யா தாசி கவனம்பண்ண அஞ்சாளின் சுமையாச்சுது.
அய்யாதுரைக்கு (அப்பாசாமிக்கு)க் கலியாணம், அவரவர் வீட்டிலே சாப்பாடு, கொட்டுமுழக்குக் கோயிலிலே, வெற்றிலை பாக்குக் கடையிலே, சுண்ணாம்பு சூளையிலே.
அய்யா பாட்டுக்கு அஞ்சடியும் ஆறடியும் தாண்டும்.
அய்யாவையர் கூழுக்கு அப்பையங்கார் தாதாவா?
அரகர என்கிறவருக்குத் தெரியுமா, அமுது படைக்கிறவனுக்குத் தெரியுமா?
அரகர என்பது பெரிதோ, ஆண்டிக்கு இடுவது பெரிதோ?
அரகரன் ஆண்டாலென்ன, மனிதன் ஆண்டாலென்ன?
430 அரக்குமுத்தி தண்ணீர்க்குப் போனாள், புண் பிடித்தவன் பின்னாலே போனான்.

அரங்கின்றி வட்டாடலும், அறிவின்றிப் பேசலும் ஒன்று.
அரசமரத்தைப் பிடித்த பேய் பிள்ளையாரையும் பிடித்ததாம்.
அரசனில்லாப் படை வெட்டுமா?
அரசனுக்கு ஒரு சொல், அடிமைக்குத் தலைச்சுமை.
அரசனுக்குத் துணை வயவாள்.
அரசனுக்கு வலியார் அஞ்சுவது எளியார்க்கு அனுகூலமாகிறது.
அரசனும் அரவும் சரி.
அரசனும் அழலும் சரி.
அரசனும் நெருப்பும் பாம்பும் சரி.
440 அரசனைக் கண்ட கண்ணுக்குப் புருடனைக் கண்டால் கொசுப் போல இருக்கிறது.

அரசனை நம்பிப் புருடனைக் கைவிட்டதுபோல.
அரசன் அருள் அற்றால் அனைவரும் அற்றார்.
அரசன் அளவிற்கு (வரை) ஏறிற்று (எட்டியது).
அரசன் அன்று கொல்லும், தெய்வம் நின்று கொல்லும்.
அரசன் இல்லாத நாடு, அச்சில்லாத தேர்.
அரசன் இல்லாத நாடு, புருடன் இல்லாத வீடு.
அரசன் உடைமைக்கு ஆகாயவாணி சாட்சி.
அரசன் எப்படியோ அப்படியே குடிகள்.
அரசன் எவ்வழி அவ்வழி குடிகள்.
450 அரசன் ஒன்றை இகழ்ந்தால் ஒக்க இகழவேண்டும், ஒன்றைப் புகழ்ந்தால் ஒக்கப் புகழவேண்டும்.

அரசன் கல்லின்மேல் கத்தரி (வழுதுணை) காய்க்கும் என்ருல், கொத்து ஆயிரம் குலை ஆயிரம் என்பார்கள்.
அரசன் குடுமியையும் பிடிக்கலாமென்று அம்பட்டன் வேலையை விரும்புவதுபோல.
அரசன் வழிப்படாதவன் இல்லை.
அரசன் வழிப்பட்டது அவனி.
அரசில்லா நாடு அலக்கழிந்தாற்போல.
அரசில்லாப் படை வெல்லுவதரிது.
அரசுக்கு இல்லை சிறுமையும் பெருமையும்.
அரசுடையானை ஆகாயம் காக்கும்.
அரணை அலகு திறக்காது.
460 அரணை கடித்தால் அப்பொழுதே மரணம்.

அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்.
அரண்மனை காத்தவனும் அடுப்பங்கரை காத்தவனும் வீண் போகிறதில்லை.
அரண்மனைக்கு ஆயிரஞ் செல்லும், குடியானவன் என்ன செய்வான் ?
அரண்மனைவாசல் காத்தவனும் பரிமடைக்காத்தவனும் பழுது போவதில்லை.
அரத்தை அரம்கொண்டும் வயிரத்தை வயிரம்கொண்டும் அறுக்கவேண்டும்.
அரபிக்குதிரையிலும் ஐயம்பேட்டைத் தட்டுவாணி நல்லது.
அரமும் அரமும் கூடினல் கின்னரம்.
அரவத்தைக் கண்டால் கீரி விடுமா ?
அரவுக்கு இல்லை சிறுமையும் பெருமையும்
470 அரனருள் அல்லாது அணுவும் அசையாது.

அரிஅரி என்ருல் ராமா ராமா என்கிருன்.
அரி என்கிற அட்சரம் தெரிந்தால் அதிகாரம் பண்ணலாம்.
அரி என்கிற அட்சரம் தெரிந்தால் அதிக்கிரமம் பண்ணலாமா ?
அரி என்ருல் ஆண்டிக்குக் கோபம், அர என்ருல் தாதனுக்குக் கோபம்.
அரிஹர பிரமாதிகளாலும் முடியாது.
அரிசி அள்ளின காக்கை போல.
அரிசி ஆழாக்கானுலும் அடுப்புக்கட்டி மூன்றுவேண்டும்.
அரிசி உண்டானல் வரிசையும் உண்டு, அக்காள் உண்டானல் மச்சானும் உண்டு.
அரிசி உழக்கானுலும் அடுப்பு மூன்று.
480 அரிசி என்று அள்ளிப்பார்ப்பாருமில்லை; உமி என்று ஊதிப்பார்ப்பாருமில்லை.

அரிசி கொண்டு (உண்ணெ) அக்காள் வீட்டுக்குப் போவா

அரிசிக்குத்தக்க உலையும் ஆமுடையானுக்குத் தக்க வீருப்பும்.
அரிசிக்குத் தக்க கனவுலே.
அரிசிப்பகையும் ஆமுடையான் பகையும் உண்டா?
அரிசிப் பொதியுடன் திருவாரூர்.
அரிசி மறந்த கூழுக்கு உப்பு ஒன்று குறையா?
அரிசியும்கறியும் உண்டானால் அக்காள்வீடு வேண்டுமா?
அரிச்சந்திரன் வீட்டுக்கு அடுத்த வீடு.
அரிதாரம் கொண்டுபோகிற நாய்க்கு அங்கு இரண்டடி இங்கு இரண்டடி.
490 அரிது அரிது அஞ்செழுத்து உணர்தல்.

அரித்து எரிக்கிற சுப்பிக்கு ஆயம் தீர்வை உண்டா?
அரிய சரீரம் அந்தரத்தெறிந்த கல்.
அரியது செய்து எளியதுக்கு ஏமாந்து திரிகிறான்.
அரியுஞ் சிவனும் ஒண்ணு, அறியாதவன் வாயிலே மண்ணு.
அரியுஞ் சிவனும் ஒன்று, அல்ல என்கிறவன் வாயிலே

அரிவாளும் அசையவேண்டும், ஆண்டை குடியும் கெட வேண்டும்.
அரிவாள் சுருக்கே அரிவாள்முனை கருக்கே.
அரிவாள் சூட்டைப்போலக் காய்ச்சல் மாற்றவோ?
அரிவை மொழிகேட்டால் அபத்தன் ஆவான்.
500 அருகங்காட்டை விட்டவனுங் கெட்டான், ஆனமாட்டை விட்டவனுங் கெட்டான்.

அருகாகப் பழுத்தாலும், விளாமரத்தில் வௌவால் சேராது.
அருக்காண முத்துக் கரிக்கோலமானாள்.
அருக்காணி நாய்ச்சியார் குரங்குப்பிள்ளை பெற்றாளாம்.
அருக்காமணி முருக்கம்பூ.
அருக்கித்தேடிப் பெருக்கி அழி.
அருங்கோடை துரும்பு அற்றுப்போகுது.
அருஞ்சுனை நீருண்டால் அப்பொழுதே ரோகம்.
அருட்செல்வம் ஆருக்கும் உண்டு, பொருட்செல்வம் ஆருக்கும் இல்லை.
அருணம்பரமே கருணம்பரம்.
510 அருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்.

அருத்தியைப் பிடுங்கித் துருத்தியிலே போட்டுத் துருத்தியைப் பிடுங்கி அருத்தியிலே போடுகிறது.
அருமை அறியாதவன் ஆண்டு என்ன, மாண்டு என்ன?

அருமை அறியாதவன் இடத்தில் போனால் பெருமை குறைந்துபோம்.
அருமை அற்றவீட்டில் எருமையும் குடியிராது.
அருமை மருமகன் தலைபோனாலும் போகட்டும், ஆதிகாலத்து உரல்போகலாகாது.
அரும்புகோணினால் அதின் மணம் குற்றமா?
அருவருப்புச் சோறும் அசங்கிதக் கறியும்.
அருள் இல்லார்க்கு அவ்வுலகமில்லை, பொருள் இல்லார்க்கு இவ்வுலகமில்லை.
அருள்வேணும், பொருள்வேணும், அடக்கம் வேணும்.
520 அரைக்கவுமாயம், கரைக்கவுமாயம்.

அரைக்காசுக்கு அழிந்த கற்பு ஆயிரம்பொன் கொடுத்தாலும் கிடையாது.
அரைக்காசுக்குக் குதிரை வாங்கவும் வேண்டும், ஆற்றைக் கடக்கப் பாயவும் வேண்டும்.
அரைக்காசுக்குப் போன மானம் ஆயிரம் கொடுத்தாலும் வாராது.
அரைக்காசுக்கு வந்த வெட்கம் ஆயிரம் பொன் கொடுத்தாலும் போகாது.
அரைக்காசை ஆயிரம் பொன்னாக்குகிறவளும் பெண்சாதி, ஆயிரம் பொன்னை அரைக்காசாக்குகிறவளும் பெண்சாதி.
அரைக்கிறவன் ஒன்று நினைத்து அரைக்கிறான், குடிக்கிறவன் ஒன்று நினைத்துக் குடிக்கிறான்.
அரைக்குடம் ததும்பும், நிறைகுடம் ததும்பாது.
அரைச்சல்லியை வைத்து எருக்குஇலையைக் கடந்ததுபோல.
அரைச்சீலை கட்டக் கைக்கு உபசாரமா?
530 அரைச்சொற் கொண்டு அம்பலம் ஏறலாமா?

அரைச்சொற் கொண்டு அம்பலம் ஏறினால், அரைச்சொல் முழுச்சொல்லாமா?
அரைஞாண் கயிறும் தாய்ச்சீலையுமாய் விடுகிறவளும் பெண் சாதி.
அரைத்த பயறு முளைத்தாற்போல.
அரைத்துட்டிலே [அரைப்பணத்திலே] கலியாணம், அதிலே கொஞ்சம் வாணவேடிக்கை.
அரைத்துட்டுக்குப் பீ தின்கிறவன்.
அரைத்து மீந்தது அம்மி, சிரைத்து மீந்தது குடுமி.
அரைப்படி அரிசி அன்னதானம், விடியுமட்டும் மேளதாளம்.
அரைப்பணங் கொடுக்கப் பால்மாறி, ஐம்பது பொன் கொடுத்துச் சேர்வைசெய்த கதை.

அரைப்பணங் கொடுத்து அழச் சொல்லி, ஒரு பணங் கொடுத்து ஓயச்சொன்னது போல.

540 அரைப்பணச் சேவகமானாலும் அரண்மனைச் சேவகம்போல் ஆகுமா?

அரைப்பணத்துக்கு மருத்துவம் பார்க்கப்போய் ஐந்துபணத்து தெளி உள்ளே போய்விட்டது.

அரையிலே புண்ணும் அண்டையிலே கடனும் ஆகாது.

அரைவித்தைகொண்டு அம்பலம் ஏறினால் அரைவித்தை முழுவித்தை ஆகுமா?

அரைவேலையைச் சபையிலே கொண்டுவருவதா?

அலுத்துக் கொலுத்து அக்காளண்டைபோனால், அக்காள் இழுத்து மச்சானிடத்தில் விட்டாளாம்.

அலை அடங்கியபின் தலைமுழுகுவதுபோல.

அலை எப்பொழுது ஒழியும், தலை எப்பொழுது முழுகுகிறது?

அலை ஓய்ந்து கடலாடலாமா?

அலை கடலுக்கு அணை போடலாமா?

550 அலைபோல நாக்கும், மலைபோல மூக்கும், ஆகாயந் தொட்ட கையும்.

அலை மோதும்போதே தலை முழுகுகிறது.

அலைவாய்த் துரும்புபோல் அலைகிறது.

அல்லக்காட்டு நரி பல்லைக் காட்டுகிறது.

அல்லல் அற்ற படுக்கை அழகிலும் அழகு.

அல்லல் ஒரு காலம், செல்வம் ஒரு காலம்.

அல்லற்பட்டு அழுதகண்ணீர் செல்வத்தைக் குறைக்கும்.

அல்லாதவன் வாயில் கள்ளை வார்.

அல்லார் அஞ்சலிக்கு நல்லார் உதை மேல்.

அல்லும் பகலும் கசடறக் கல்.

560 அவகடம் உள்ளவன் அருமை அறியான்.

அவகுணக்காரன் ஆவாசமாவான்.

அவசரக்காரனுக்கு ஆகிலோ பெட்டு, நாகுச் சேத்திலோ பெட்டு.

அவசரக்காரனுக்குப் புத்தி மட்டு.

அவசரக் கோலம் அள்ளித் தெளித்த கோலம்.

அவசரத்தில் அரிக்கண் சட்டியிலும் கை நுழையாது.

அவசரத்தில் உபசாரமா?

அவசரத்தில் குண்டுச் சட்டியில் கை நுழையாது.

அவசரத்தில் செத்த பிணத்துக்குப் பீச்சூத்தோடே மாரடிக்கிறாள்.

அவசரத்துக்குப் பாவமில்லை.

570 அவசரப்பட்ட மாமியார் மருமகளை அழைத்தாளாம்.

அவசாரி ஆடினாலும் அதிருட்டம் வேண்டும், திருடப்போனாலும் திசை வேண்டும்.
அவசாரி ஆமுடையான் ஆபத்துக் குதவுவானா?
அவசாரி என்று ஆனைமேல் ஏறலாம், திருடி என்று தெருவில் வரலாமா?
அவசாரிக்கு ஆணையில்லை, திருடிக்குத் தெய்வமில்லை.
அவசாரிக்கு வாய் பெரிது, அஞ்சு ஆறு அரிசிக்குக் கொதி பெரிது.
அவசாரி போகவும் ஆசை யிருக்கிறது, அடிப்பான் என்று பயமும் இருக்கிறது.
அவசாரியிலே வந்து பெருவாரியிலே போகிறது.
அவதந்திரம் தனக்கு அந்தரம்.
அவதிக் குடிக்குத் தெய்வமே துணை.
580 அவத்தனுக்கும் சமர்த்தனுக்கும் காணி கவை இல்லை.

அவப்பொழுதிலும் தவப்பொழுது நல்லது.
அவமானம் பண்ணி வெகுமானம் பேசுகிறான்.
அவரவர் அக்கறைக்கு அவரவர் பாடுபடுவார்.
அவரவர் எண்ணத்தை ஆண்டவர் அறிவார்.
அவரவர் மனமே அவரவர்க்குச் சாட்சி.
அவரா சுறுக்கே அரிவாள்மணைக் கருக்கே.
அவருடைய சிறகு முறிந்துபோயிற்று.
அவலட்சணம் உள்ள குதிரைக்கு சுழி சுத்தம் பார்க்க வேணுமா?
அவலமாய் வாழ்பவன் சவலமாய்ச் சாவான்.
590 அவலைச் சாக்கிட்டு உரலை இடிக்கிறது.

அவலை நினைத்துக்கொண்டு உரலை இடிக்கிறாள்.
அவலை முக்கித் தின்னு, எள்ளை நக்கித் தின்னு.
அவளவள் என்பதைவிட அரிஅரி என்பது நலம்.
அவளிடத்தில் எல்லாரும் பிச்சை வாங்கவேண்டும்.
அவளுக்கிவள் எழுந்திருந்து உண்பாள்.
அவளுக்கு ரொம்பத் தக்குத்தெரியும்.
அவளுக்கெவள் ஈடு, அவளுக்கவளே சோடு.
அவளைக்கண்ட கண்ணாலே இன்னொருத்தியைக் காணுகிறதா?
அவள் அழகுக்குத் தாய் வீடு.
600 அவள் அழகுக்குப் பத்துபேர் வருவார்கள், கண் சிமிட்டினால் ஆயிரம்பேர் மயங்கிப் போவார்கள்.

அவள் அழகைப் பார்த்தால் கிள்ளித்தின்னலா மென்றிருக்

அவள் எமனைப் பலகாரம் பண்ணுவாள்.
அவள் சமர்த்துப்பானை சந்தியில் கவிழ்ந்தது.
அவள் சம்பத்து அறியாமல் கவிழ்ந்தது.
அவள் சாட்டிலே திரை சாட்டா.
அவள் சொல் உனக்குக் குரு வாக்கு.
அவள் பலத்தை மண்கொண் டொளிச்சுது.
அவள் பாடுகிறது குயில் கூவுகிறது போல.
அவள் பேர் கூந்தலழகி அவள் தலை மொட்டை.
610 அவள் பேர் தங்கமாம் அவள் காதில் பிச்சோலையாம்.

அவனருளுற்றால் அனைவரு முற்றார், அவனருளற்றால் அனைவருமற்றார்.
அவனியிலில்லை ஈடு, அவளுக்கவளே சோடு.
அவனுக்கு ஆகாயம் மூன்று விரற்கிடை.
அவனுக்குக் கப்படாவுமில்லை, வெட்டுக் கத்தியுமில்லை.
அவனுக்குச் சாண் ஏறினால் முழம் சறுக்குகிறது.
அவனுக்குச் சிறை தாய் வீடு.
அவனுக்குச் சுக்கிர திசை அடிக்கிறது.
அவனுக்குப் பொய்ச்சத்தியம் பாலும் சோறும்.
அவனுக்கும் இவனுக்கும் எருமைச் சங்காத்தம்.
620 அவனுக்குள்ளே அகப்பட்டிருக்கிறதாம் என் பிழைப்பெல்லாம்.

அவனுடைய பேச்சு காற்சொல்லும் அரைச்சொல்லும்.
அவனுடைய வாழ்வு நண்டுக்குடுவை உடைந்ததுபோல்
அவனை உரித்து வைத்தாற்போல் இருக்கிறான்.
அவனைப் பேச்சிட்டுப் பேச்சுவாங்கி ஆமை மல்லாத்துகிறாப் போல் மல்லாத்திப்போட்டான்.
அவனே இவனே என்பதைவிடச் சிவனே சிவனே என்கிறது நல்லது.
அவனே வெட்டவும் விடவும் கர்த்தன்.
அவனோடு இவனை எணிவைத்துப் பார்த்தாலும் காணாது.
அவன் அசையாது (அசையாமல்) அணு அசையாது.
அவன் அண்டை அந்தப்பருப்பு வேகாது.
630 அவன் அதிகாரம் கொடிகட்டிப் பறக்கிறது.

அவன் அவன் எண்ணத்தை, ஆண்டவன் ஆக்கினாலும் ஆக்குவான், அழித்தாலும் அழிப்பான்.
அவன் அவன் செய்த வினை அவன் அவனுக்கு.
அவன் அவன் மனமே அவன் அவனுக்குச் சாட்சி.
அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது.

அவன் ஆகாயத்தை வடுப்படாமல் கடிப்பேனென்கிறான்.
அவன் இட்டதே சட்டம்.
அவன் இராச சமுகத்திற்கு எலுமிச்சம்பழம்.
அவன் உள்ளெல்லாம் புண், உடம்பெல்லாம் கொப்புளம்.
அவன் உனக்குக் கிள்ளுக்கீரையா ?
640 அவன் எங்கே இருந்தான், நான் எங்கே இருந்தேன்.
அவன் எரி பொரியென்று விழுகிறான்.
அவன் எனக்கு அட்டமத்துச் சனி.
அவன் என் தலைக்கு உலை வைக்கிறான்.
அவன் என்னை ஊதிப்பறக்கடிக்கப் பார்க்கிறான்.
அவன் ஒரு குளிர்ந்த கொள்ளி.
அவன் ஓடிப்பாடி நாடியில் அடங்கினான்.
[illegible]
அவன் காலால் இட்ட வேலையைக் கையால் செய்வான்.
அவன் காலால் இட்ட வேலையைத் தலையால் செய்வான்.
650 அவன் காலால் கீறினதை நான் நாவால் அழிக்கிறேன்.
அவன் காலால் முடிந்ததைக் கையால் அவிழ்க்க முடியாது.
அவன் குடித்தனத்தைக் கமுக்கமாய்க் கொண்டுபோகிறான்.
அவன் கெட்டான் குடியன், எனக்கு இரண்டு திராம் வாரு (மொந்தை போடு).
அவன் கை மெத்தக் கூராச்சே!
அவன் கையைக்கொண்டே அவன் கண்ணில் குத்தினான்.
அவன் கொஞ்சப் புள்ளியா ?
அவன் சாதிக்கு எந்த புத்தியோ குலத்துக்கு எந்த ஆசாரமோ அதுதான் வரும்.
அவன் சாயம் வெளுத்துப் போய்விட்டது.
அவன் சிறகில்லாப் (சிறகொடிந்த) பறவை.
660 அவன் சொன்னதே சட்டம் இட்டதே பிச்சை.
அவன் சோற்றுக்குத் தாளம் போடுகிறான்.
அவன் சோற்றை மறந்துவிட்டான்.
அவன் தலையில் ஓட்டைக் கவிழ்ப்பான்.
அவன் தன்னாலே தான் கெட்டால் அண்ணாவி என்ன செய்வார் ?
அவன் தொட்டுக் கொடுத்தான், நான் இட்டுக் கொடுத்தேன்.
அவன் தொத்தி உறவாடித் தோலுக்கு மன்றாடுகிறான்.
அவன் நடைக்குப் பத்துப்பேர் வருவார்கள், கைவீச்சுக்குப் பத்துப்பேர் வருவார்கள்.
அவன் நா அசைய நாடு அசையும்.
அவன் பசியாமல் கஞ்சி குடிக்கிறான்.
670 அவன் பேசுகிறதெல்லாம் தில்லும் பில்லும் திருவாதிரை.

அவன் பேச்சு விளக்கெண்ணெய் சமாசாரம்.
அவன் பேச்சைத் தண்ணீர்மேல் எழுதிவைக்க வேண்டும்.
அவன் மிதித்த இடத்தில் புல்லும் சாகாது.
அவன் மிதித்த இடம் பற்றி எரிகின்றது.
அவன் மூத்திரம் விளக்காய் எரிகிறது.
அவன் மெத்த அத்து மிஞ்சின பேச்சுக்காரன்
அவன் வல்லாள கண்டனை வாரிப் போரிட்டவன்.
அவிவேகி உறவிலும் விவேகி பகையே நன்று.
அவிழ் என்ன செய்யும் அஞ்சுகுணம் செய்யும், பொருள் என்ன செய்யும் பூவை வசம் செய்யும்.
680 அவையிலும் ஒருவன், சவையிலும் ஒருவன்.

அவ்வளவு இருந்தால் அடுக்கிவைத்து வாழேனோ?
அழ அழச் சொல்லுவார் தன் மனிதர், சிரிக்கச் சிரிக்கச் சொல்லுவார் புறத்தியார்.
அழகிருந்தென்ன, அதிருட்டம் இருக்கவேணும்.
அழகிலே பிறந்த பவளக்கொடி, ஆற்றிலே பிறந்த சாணிக் கூடை.
அழகிற்கு மூக்கை அழிப்பார் உண்டா?
அழகு இருந்து அழும், அதிருட்டம் இருந்து உண்ணும்.
அழகு ஒழுகுகிறது, நாய் வந்து நக்குகிறது, ஓட்டைப் பானை கொண்டுவா பிடித்துவைக்க.
அழகு ஒழுகுது, மடியிலே கட்டடா கலயத்தை.
அழகுக்கு இட்டால் ஆபத்துக்குதவும்.
690 அழகுக்குச் செய்தது ஆபத்துக்குதவும்.

அழகு சொட்டுகிறது.
அழகு சோறுபோடுமா, அதிருட்டம் சோறு போடுமா?
அழகு பெண்ணே காற்றாடி (காத்தாயி), (உன்னை) அழைக்கிறாண்டி கூத்தாடி.
அழச்சொல்லுகிறவன் பிழைக்கச் சொல்லுவான், சிரிக்கச் சொல்லுகிறவன் கெடச்சொல்லுவான்.
அழச்சொல்லுவார் தமர், சிரிக்கச் சொல்லுவார் பிறர்.
அழிக்கப்படுவானைக் கடவுள் அறிவீனன் ஆக்குவார்.
அழித்துக் கழித்துப்போட்டு வழித்து நக்கி யென்று பெயரிட்டானாம்.
அழிந்த கொல்லையில் குதிரை மேய்ந்தாலென்ன, கழுதை மேய்ந்தாலென்ன?
அழிந்தவள் ஆரோடு போனால் என்ன?
700 அழிந்து பழஞ்சோறாய்ப் போச்சுது.

அழிவழக்குச் சொன்னவன், பழிபொறுக்கும் மன்னவன்.
அழுகள்ளன் தொழுகள்ளன் ஆசாரக்கள்ளன்.
அழுகிற ஆணையும் சிரிக்கிற பெண்ணையும் நம்பப்படாது.
அழுகிறதற்கு அரைப்பணம் கொடுத்து ஓய்கிறதற்கு ஒரு பணம் கொடு.
அழுகிற பிள்ளைக்கு வாழைப்பழம் காட்டுகிறதுபோல.
அழுகிற வீட்டில் இருந்தாலும் ஒழு(கு)கிற வீட்டில் இருக்கலாகாது.
அழுகிற வேளைபார்த்து அக்குள் பாய்ச்சுகிறான்.
அழுகை ஆங்காரத்தின் மேலும், சிரிப்பு கெலிப்பின் மேலும் தான்.
அழுகையும் ஆங்காரமும் சிரிப்புக் கெலிப்போடே.
710 அழுக்குக்குள் இருக்கும் மாணிக்கம்.
அழுக்கை அழுக்குக் கொல்லும், இழுக்கை இழுக்குக் கொல்லும்.
அழுக்கைத் துடைத்து மடியில் வைத்தாலும் புழுக்கைக் குணம் போகாது.
அழுத கண்ணும் சிந்திய மூக்கும்.
அழுத பிள்ளை உரம் பெறும்.
அழுத பிள்ளை பால் குடிக்கும்.
அழுத பிள்ளையும் சிரித்ததாம், கழுதைப்பாலைக் குடித்ததாம்.
அழுத பிள்ளையும் வாய்மூடும் அதிகாரம்.
அழுதவனுக்கு அகங்காரமில்லை.
அழுதாலும் பிள்ளை அவளே பெறவேண்டும்.
720 அழுத்த நெஞ்சன் ஆருக்கும் உதவான், இளகின நெஞ்சன் எவர்க்கும் உதவுவான்.
அழுபிள்ளைத் தாய்ச்சிக்குப் பணயம் கொடுத்தால் அநுபவிக்க ஒட்டுமா குழந்தை?
அழுவார் அழுவார் தம் தம் துக்கமே, திருவன் பெண்டீருக்கு அழுவாரில்லை.
அழுவார் அழுவார் தம் துக்கம் அசலார்க்கன்று.
அழுவார் அற்ற பிணமும் ஆற்றுவார் அற்ற சுடலையும்.
அழையா வீட்டிற்கு நுழையாச் சம்பந்தி.
அளகாபுரி கொள்ளையானாலும் அதிருட்ட ஈனனுக்கு ஒன்று

அளகாபுரியிலும் விறகுத் தலையன் உண்டு.
அளகேசன் ஆனாலும் அளவு அறிந்து செலவுசெய்ய வேண்டும்.
அளக்கிற நாழி அகவிலை அறியுமா?
730 அளந்த அளந்த நாழி ஒழிந்து ஒழிந்து வரும்.

அளந்த நாழிகொண்டு அளப்பான்.
அளந்தால் ஒருசாணில்லை, அரிந்தால் ஒரு சட்டிகாணாது.
அளவிட்டவரைக் கள விடலாமா?
அளவிற்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சாகும்.
அளுங்குப் பிடி பிடித்தாற்போல.
அள்ளாது குறையாது சொல்லாது பிறவாது.
அள்ளிக்குடிக்கத் தண்ணீரில்லை, அவள்பேர் கங்காதேவி.
அள்ளிக் கொடுத்தால் சும்மா, அளந்து கொடுத்தால் கடன்.
அள்ளிக்கொண்டே போகச்சே கிள்ளிக்கொண்டு வருகிறான்.
740 அள்ளிப் பால் வார்க்கையிலே சொல்லிப் பால் வார்த்திருக்குது.
அள்ளுகிறவன் இடத்தில் இருக்கல் ஆகாது, கிள்ளுகிறவன் இடத்தில் இருந்தாலும்.
அள்ளுவது எல்லாம் நாய் தனக்கென்று எண்ணுமாம்.
அறக்கப்பறக்கப் பாடுபட்டாலும் படுக்கப் பாயில்லை.
அறக்கல்வி முழுமொட்டை.
அறக்காத்தான் பெண்டிழந்தான், அறுகாதவழி சுமந்து அழுதான்.
அறக்குழைத்தாலும் குழைப்பாள், அரிசியாய் இறக்கினாலும் இறக்குவாள்.
அறக்கூர்மை முழுமொட்டை.
அறங்கையும் புறங்கையும் நக்குதே.
அறச்செட்டு முழுநட்டம்.
750 அறநனைந்தவருக்குக் கூதல் என்ன?
அறப்படித்தவன் அங்காடிபோனால் விற்கவும் மாட்டான் கொள்ளவும் மாட்டான்.
அறப்பத்தினி ஆமுடையானை அப்பா என்று அழைத்த கதை.
அறப்பேசி உறவாடவேண்டும்.
அறமுறுக்கினால் அற்றுப்போகும்.
அறமுறுக்கினால் கொடி முறுக்குப்படும்.
அறமுறுக்குக் கொடும்புரிகொண்டு அற்றுவிடும்.
அறம் பொருள் இன்பம் எல்லார்க்கும் இல்லை.
அறவடிக்குமுன் சோறு காடிப்பானையில் விழுந்தாற்போல.
அறவடித்த முன்சோறு கழுநீர்ப்பானையில் விழும்.
760 அறவுங்கொடுங்கோல் அரசன் கீழ்க் குடியிருப்பிற் குறவன் கீழ்க் குடியிருப்பு மேல்.
அறிஞர்க்கழகு அகத்துணர்ந்து அறிதல்.
அறிந்த ஆண்டையென்று கும்பிடப்போனால், உங்கள் அப்பன் பத்துப்பணம் கொடுக்கவேணும் கொடு என்றான்

அறிந்த பார்ப்பான் சிநேகிதம், ஆறு காசுக்கு மூன்று தோசையா?
அறிந்தவனென்று கும்பிட அடிமைவழக்கிட்ட கதை.
அறிந்து அறிந்து செய்கிறபாவத்தை, அழுது அழுது தொலைக்கவேணும்.
அறிந்தும் கெட்டேன் அறியாமலும் கெட்டேன், சொறிந்து புண் ஆயிற்று.
அறிய அறியக் கெடுவார் உண்டா?
அறியாத நாளெல்லாம் பிறவாத நாள்.
அறியாப்பிள்ளை ஆனாலும் ஆடுவான் மூப்பு.
770 அறியாப்பிள்ளை புத்தியைப் போல.

அறியாமல் தாடியை வளர்த்தது அம்பட்டன் கையிற் கொடுக்கவா?
அறிவிலே விளையுமா? எருவிலே விளையுமா?
அறிவில்லார் சிநேகம் அதிக உத்தமம்.
அறிவீனர் தமக்கு ஆயிரம் உரைக்கினும் அவம்.
அறிவீனனிடத்தில் புத்தி கேளாதே.
அறிவு ஆர் அறிவார்? ஆய்ந்தவர் அறிவார்.
அறிவு இல்லாச் சயனம் அம்பரத்திலுமில்லை.
அறிவு இல்லாதவன் பெண்களிடத்திலும் தாழ்வுபடுவான்.
அறிவு இல்லார் தமக்கு ஆண்மையுமில்லை.
780 அறிவு கெட்டவனுக்கு ஆர் சொல்லியும் என்ன?

அறிவுடன் ஞானம், அன்புடன் ஒழுக்கம்.
அறிவுடையாரை அடுத்தாற்போதும்.
அறிவுடையாரை அரசனும் விரும்பும்.
அறிவுதரும் வாயும் அன்பு உரைக்கும் நாவும்.
அறிவு புறம்போய் அண்டதுபோல.
அறிவு பெருத்தோன் அல்லல் (நோய்) பெருத்தோன்.
அறிவு மனதை அரிக்கும்.
அறிவேன் அறிவேன் ஆலிலை புளியிலைபோலிருக்கும்.
அறுகங்கட்டைபோல் அடிவேர் துளிர்க்கிறது.
790 அறுகங்கட்டையும் ஆபத்துக்குதவும்.

அறுக்க ஊறும் பூம்பாளை, அணுக ஊறும் சிற்றின்பம்.
அறுக்கமாட்டாதவன் இடுப்பிலே ஐம்பத்தெட்டு அரிவாள்.
அறுதலி மகனுக்கு அங்கமெல்லாம் சேட்டை.
அறுதலி மகனுக்கு வாழ்க்கைப்பட்டு விருதாவிலே தாலி அறுத்தேன்.
அறுத்த கோழி துடிக்குமாப் போல

அறுத்தவள் ஆண்பிள்ளை பெற்றகதை.
அறுத்த விரலுக்குச் சுண்ணாம்பு கிடையாது.
அறுத்த விரலுக்குச் சுண்ணாம்பு தடவமாட்டான், ஆண்டி வந்தாலும் பிச்சை போடமாட்டான்.
அறுத்துக் கொண்டதாம் கழுதை, எடுத்துக் கொண்டதாம் ஓட்டம்.
800 அறுபது நாளைக்கு எழுபது கந்தை.
அறுபத்துநாலடிக் கம்பத்திலேறி ஆடினாலும், அடியிலிறங்கித்தான் தியாகம் வாங்கவேண்டும்.
அறுபத்தெட்டுக் கோரம்பலம்.
அறுப்புக்காலத்தில் எலிக்கு ஐந்து பெண்சாதி.
அறுவாய்க்கு வாய்பெரிது, அரிசிக்குக் கொதிபெரிது.
அறை காத்தான் பெண்டிழந்தான் அங்கேயும் ஒருகை தூக்கி விட்டான்.
அறைக்கீரைப் புழு தின்னாதவனும் அவசாரிகையில் சோறுண்ணாதவனும் இல்லை.
அறையில் ஆடி அல்லவோ அம்பலத்தில் ஆடவேண்டும்.
அறையில் இருந்தபேர்களை அம்பலம் ஏற்றுகிற புரட்டன்.
அறைவீட்டுச் செய்தி அம்பலத்தில் வரும்.
810 அற்ப ஆசை கோடி தவத்தைக் கெடுக்கும்.
அற்பக்கோபத்தினால் அறுந்தமூக்கு ஆயிரம் இன்பம் வந்தாலும் வருமா?
அற்ப சகவாசம் பிராண சங்கடம்.
அற்ப சுகம் கோடி துக்கம்.
அற்பத்திற்கு அழகு குலைகிறதா?
அற்பத் துடைப்பமானாலும் அகத்தூசியை அடக்கும்.
அற்பர் சிநேகம் பிராண கண்டிதம்.
அற்பர் சிநேகம் பிராண சங்கடம்.
அற்பனுக்குப் பவிசு (ஐசுவரியம்) வந்தால் அர்த்தராத்திரி குடை பிடிப்பான்.
அற்பன்கை ஆயிரம் பொன்னிலும் சற்புத்திரன் கைத் தவிடு நன்று.
820 அற்பன் பணம் படைத்தால் அர்த்தராத்திரி குடை பிடிப்பான்.
அற்பன் பணம் படைத்தால் வைக்க வகை அறியான்.
அற்றது பற்றெனில் உற்றது வீடு.
அற்றத்துக்கு உற்றதாய்.
அனந்தத்துக்கு ஒன்றாய் உரையிட்டாலும் அளவிடப் போகாது.

அனல்குளிர் வெதுவெதுப்பு இம்மூன்று காலமும் ஆறு காலத்திற்குள் அடங்கும்.
அனற்றை இல்லா ஊரிலே வண்ணாரிருந்து கெட்டார்கள்.
அனுபோகம் தொலைந்தால் அவிழ்தம் பலிக்கும்.
அன்பற்ற மாமியாருக்குக் கால்பட்டால் குற்றம் கை பட்டால் குற்றம்.
அன்பற்ற மாமியாருக்குக் கும்பிடுகிறதும் குற்றந்தான்.
830 அன்பற்றார் வாசலிலே பின்பற்றிப் போகாதே.

அன்பான சிநேகிதனை ஆபத்தில் அறி.
அன்பில்லார் தமக்கு ஆதிக்கம் இல்லை.
அன்பு இருந்தால் ஆகாததும் ஆகும்.
அன்புடையானைக் கொடுத்து அலையச்சே அயல்வீட்டுக்காரன் வந்து அழைத்த கதை.
அன்புள்ள குணம் அலையில்லா ஆறு.
அன்பே பிரதானம் அதுவே வெகுமானம்.
அன்றற ஆயிரம் பொன்னிலும், நின்றற ஒருகாசு பெரிது.
அன்றில்லை இன்றில்லை அழுகல் பலாக்காய், கலியாண வாசலிலே கலந்துண்ண வந்தாயே!
அன்று இறுக்கலாம் நின்றிறுக்கலாகாது.
840 அன்று எழுதினவன் அழித்து எழுதுவானா?

அன்று கண்டதைத் அடுப்பில்போட்டு ஆக்கினபானையைத் தோளில் போட்டுக்கொண்டு திரிகிறதுபோல்.
அன்று கண்ட மேனிக்கு அழிவு இல்லை.
அன்று கண்டனர் இன்றுவந்தனர்.
அன்று கழி அன்று கழி.
அன்று குடிக்கத் தண்ணீரில்லை ஆனைமேல் அம்பாரி வேணுமாம்.
அன்று கொள் நின்று கொள் என்றும் கொள்ளாதே.
அன்று சாப்பிட்ட சாப்பாடு இன்னும் ஆறு மாதத்திற்குத் தாங்கும்.
அன்று தின்ற ஊண் ஆறுமாதத்துப் பசியை அறுக்கும்.
அன்று நடு அல்லது கொன்று நடு.
850 அன்றுமில்லை காற்று, இன்றுமில்லை குளிர்.

அன்றுமில்லை தையல், இன்றுமில்லை பொத்தல்.
அன்றைக்காடை இன்றைக்குக்கொடை என்றைக்கு விடியும் இடையன் தரித்திரம்?
அன்றைக்கு அடித்த அடி ஆறுமாதம் தாங்கும்.
அன்றைக்குக் கிடைக்கிற ஆயிரம் பொன்னிலும் இன்றைக்குக் கிடைத்த அரைக்காசு பெரிது.

அன்றைக்குச் சொன்ன சொல் சென்ம சென்மத்துக்கும் உறைக்கும்.
அன்றைக்குத் தின்கிற பலாக்காயைவிட இன்றைக்குத் தின்கிற களாக்காய் பெரிது.
அன்றைக்கெழுதினதை அழித்தெழுதப் போகிறுஞ?
அன்னதானத்திற்குச் சரி என்ன தானமிருக்கிறது?
அன்னநடை நடக்கப்போய்த் தன் நடையும் கெட்டாற் போல.
860 அன்னப்பாலுக்குச் சிங்கி யடித்தவன் ஆவின் பாலுக்குச் சர்க்கரை தேடுகிறுன்.

அன்னப்பிடி வெல்லப்பிடி ஆச்சுது.
அன்னமயம் இன்றிப் பின்னே மயம் இல்லே.
அன்னமயம் பிராணமயம்.
அன்னம் இட்டாரைக் கன்னம் இடலாமா?
அன்னம் இறங்குவதே அபான வாயுவால்.
அன்னம் ஒடுங்கிஞல் அஞ்சும் ஒடுங்கும்.
அன்னம் மிகக்கொள்வானும் ஆடை அழுக்கு ஆவானும் பதர்.
அன்னம் முட்டாஞல் எல்லாம் முட்டு.
அன்னிய சம்பந்தமே யல்லாமல் அத்தை சம்பந்தமில்லே என்கிறுன்.
870 அன்னிய மாதர் அவதிக்கு உதவுவாரா?

அன்னேக்கு உதவாதவன் ஆருக்கு மாகான்.

ஆ

ஆ என்பவருக்கென்ன, அன்றும் படைப்பவர்க்கல்லவா தெரியும்.
ஆகடிக்காரன் போகடியாய்ப் போவான்.
ஆகட்டும் போகட்டும் அவரைக்காய் காய்க்கட்டும், தம்பி பிறக்கட்டும் தம்பட்டங்காய் காய்க்கட்டும், அவனுக்குக் கலியாணம் ஆகட்டும், உன்னேக் கூப்பிடுகிறேஞே?
ஆகாசத்தில் இருந்து அறுந்து விட்டேன், பூமிதேவி ஏற்றுக் கொண்டாள்.
ஆகாசத்தில் எறிந்தால் அங்கேயே நிற்குமோ?
ஆகாசத்தை வடுப்படாமல் கடிப்பேன் என்கிறுன்.
ஆகாத நாளேயில் பிள்ளே பிறந்தால், அண்டை வீட்டுக்காரனே என்ன செய்யும்?
ஆகாத பஞ்சாங்கத்துக்கு அறுபது நாழிகையும் தியாச்சியம்.
880 ஆகாதவற்றை ஏற்றுல் ஆராய்ந்து ஏற்றுக் கொள்.

ஆகாதவன் குடியை அடுத்துக் கெடுக்கவேண்டும்.

ஆகாத வேளையில் பிள்ளை பிறந்தால் அப்பனையும் ஆத்தாளையும் கொல்லுமே யொழிய, பஞ்சாங்கஞ் சொன்ன பார்ப்பானை என்ன செய்யும்?

ஆகாதும் போகாதும் ஆண்டிகளுக்கு, அதிலும் கெட்டது குருக்களுக்கு.

ஆகாத்தியக்காரனுக்குப் பிரமகத்திக்காரன் சாட்சியா?

ஆகாயத்தில் கூட அரைக்குழிக்கு ஆவாச மில்லை.

ஆகாயத்தில் பறக்க உபதேசிப்பேன், என்னைத் தூக்கி ஆற்றுக்கு அப்பால் விடு என்கிறான் குரு.

ஆகாயத்துக்கு மையம் காட்டுகிறது போல.

ஆகாயத்தைப் பருந்து எடுத்துக்கொண்டு போகுமா?

ஆகாயத்தை வடுப்படக் கடிக்கிறதா?

890 ஆகாய மட்டும் அளக்கும் இருப்புத் தூணைச் செல்லரிக்குமா?

ஆகாயம் பார்க்கப் போயும் இடுமுடுக்கா!

ஆகாயம் பெற்றது (போட்டது) பூமி தாங்கினது.

ஆகாயம் விழுந்துவிட்டது போல.

ஆகாய வல்லிடி அதிர இடிக்கும்.

ஆகிறகாலத்தில் அவிழ்தம் பலிக்கும்.

ஆகிறவன் அரைக்காசிலும் ஆவான், ஆகாதவனுக்கு ஆயிரங் கொடுத்தாலும் விடியாது.

ஆகுங்காய் பிஞ்சிலே தெரியும்.

ஆகுங்காலத்தில் அடியாளும் பெண் பெறுவாள்.

ஆகுங்காலம் ஆகும், போகுங்காலம் போகும்.

900 ஆகுங்குடிக்கு அடியாள் பெண் பெறுவாள்.

ஆக்கப் பிள்ளை நம் வீட்டில், அடிக்கப் பிள்ளை அயல் வீட்டிலோ?

ஆக்கப் பொறுத்தவன் ஆறப் பொறுனா?

ஆக்கமாட்டாத அழுகல்நாரிக்குத் தேடமாட்டாத திருட்டுச் ~~சாவுகன்~~

ஆக்க மாட்டேனென்றால் அரிசியைப் போடு.

ஆக்கவேண்டாம் அரைக்கவேண்டாம் பெண்ணே, என் அருகிலிருந்தாலும் போதுமடி கண்ணே.

ஆக்கி அரைத்துப் போட்டவள் கெட்டவள், வழிக்கூட்டி அனுப்பினவள் நல்லவள்.

ஆக்கிற் குழைப்பேன், அரிசியாய் இறக்குவேன்.

ஆக்கினையும் செங்கோலும் அற்றது அரைநாழிகையிலே.

ஆக்குகிறவள் சலித்தால் அடுப்பு பாழ், குத்துகிறவள் சலித்தால் குந்தாணி பாழ்.

910 ஆங்காரத்தாலே அழிந்தவர் அநந்தம் பேர்.

ஆங்காரிகளுக்கு அதிகாரி.
ஆங்கால மாகும், போங்காலம் போகும்.
ஆங்காலம் எல்லாம் அவசாரி ஆடிச் சாங்காலம் சங்கரா சங்கரா என்கிறாள்.
ஆசரித்த தெய்வமெல்லாம் அடியோடே மாண்டது.
ஆசாரப்பார்ப்பான் காசிக்குப் போனாலும், பறையன் கோசம் தலையி லடிபட்டதாம்.
ஆசாரப் பூசைச்சட்டி அதன்மேல் கவிச்சுச் சட்டி.
ஆசாரம் இல்லா அசடருடன் கூடிப் பாசாங்கு பேசிப் பதி இழந்துபோனேனே!
ஆசானுக்கும் அடைவு தப்பும்.
ஆசீர்வாதமும் சாபமும் அறவோர்க்கு இல்லை.
920 ஆசை அண்டாதானால் அழுகையும் அண்டாது.

ஆசை அவள்மேலே, ஆதரவு பாய்மேலே.
ஆசை அறுபதுநாள், மோகம் முப்பதுநாள், தொண்ணூறு நாளும் போனால் தடைப்பக் கட்டை அடி.
ஆசை இருக்கிறது தாசில்பண்ண, அமிசை (அதிருட்டம்) இருக்கிறது கழுதை மேய்க்க.
ஆசை உண்டானால் பூசை உண்டு.
ஆசை உள்ளளவும் அலைச்சலும் உண்டு.
ஆசைகாட்டி மோசம் செய்கிறதா?
ஆசை கொண்ட பேருக்கு ரோசம் இல்லை.
ஆசைக்கு அளவில்லை.
ஆசைக்கு ஒரு பெண்ணும், ஆஸ்திக் கொரு பிள்ளையும்.
930 ஆசை நோய்க்கு மருந்தும் உண்டாங் கொலோ?

ஆசை நோவுக்கு அவிழ்தம் ஏது?
ஆசை பெரிதோ, மலை பெரிதோ?
ஆசை பெருக அலைச்சலும் பெருகும்.
ஆசைப்படு, மோசம் போகாதே.
ஆசைப்படுவது அவ்வளவும் துன்பம்.
ஆசைப்பட்ட பண்டம் ஊசிப் போயிற்று.
ஆசையுள்ள இடத்தில் பூசை நடக்கும்.
ஆசையெல்லாம் தீர அடித்தாள் முறத்தாலே.
ஆசை வெட்கம் அறியாது.
940 ஆசை வைத்தால் நாசம்.

ஆச்சாபுரக் காட்டிலே ஐம்பது புலி குத்தினவன், பறைச்சேரி நாயோடே பங்கம் அழிகிறான்.
ஆச்சி ஆச்சி மெத்தப் படித்துப் பேசாதே.
ஆடப்பாடத் தெரியாது இரண்டு பங்குண்டு.

ஆடப்போன கங்கை அண்டையில் வந்தாற் போல.
ஆடமாட்டாத தேவடியாள் கூடம் போதாதென்றாளாம்.
ஆடமாட்டாதவள் கூடம் கோணல் என்றாளாம்.
ஆடலோகத்து அமுதத்தை ஈக்கள் மொய்த்துக்கொண்டாற் போல.
ஆடவன் செத்தபின்பு அறுதலிக்குப் புத்திவந்தது.
ஆடவிட்டு நாடகம் பார்க்கிறதா ?
950 ஆடவிட்டு வேடிக்கை பார்க்கிறது.

ஆடாசாதி கூடாசாதியா ?
ஆடாதான் மத்தளத்தைப் பழித்தானும்.
ஆடாது எல்லாம் ஆடி அவரைக்காயும் அறுத்தாச்சுது.
ஆடாதுமாடி ஐயனார்க்குக் காப்பும் அறுத்தாச்சுது.
ஆடி அமர்ந்தது ஒரு நாழிகையில்.
ஆடி அறவெட்டை, அகவிலை நெல்விலை.
ஆடி ஓடி நாடியி லடங்கிற்று.
ஆடி ஓய்ந்த பம்பரம் போல.
ஆடிக்கரு அழிந்தால் மழை குறைந்து போம்.
960 ஆடிக்கறக்கிற மாட்டை ஆடிக்கறக்கவேண்டும், பாடிக் கறக்கிற மாட்டைப் பாடிக்கறக்கவேண்டும்.

ஆடிக்காற்றிலே அம்மி பறக்கச்சே இலவம்பஞ்சுக்கு எங்கே கதி ?
ஆடிக்காற்றிலே இலவம்பஞ்சு பறந்ததுபோல.
ஆடிக்காற்றிலே பூளைப்பூ பறந்தாற்போல.
ஆடிக்காற்றில் உதிரும் சருகுபோல்.
ஆடிக்காற்றில் எச்சிற் கல்லைக்கு வழியா ?
ஆடிக்கு அழைக்காத மாமியாரைத் தேடிப் பிடித்துச் செருப் பால் அடி.
ஆடிக்கொரு தடவை (தரம்), ஆவணிக்கொரு தடவை (தரம்).
ஆடி மாதத்தில் குத்தின குத்து ஆவணி மாதத்தில் உளைப்பு எடுத்ததாம்.
ஆடிய காலும் பாடிய நாவும் சும்மாவிராது.
970 ஆடிய கூத்தும் பாடிய இராகமும்.

ஆடிவிதை தேடிப்போடு.
ஆடு இருக்க இடையனை விழுங்குமா.
ஆடு ஊடாடக் காடு விளையாது.
ஆடு எடுத்த கள்ளனைப்போலே விழிக்கிறான்.
ஆடு கடிக்குமென்று இடையன் உறியேறிப் பதுங்குவானும்.
ஆடு காற்பணம், புடுக்கு முக்காற்பணம்.
ஆடு கிடந்த இடத்திலே மயிர்தானும் கிடையாமற்போயிற்று.

ஆடு கிடந்த இடத்தில் பழுப்புத்தானும் கிடையாது.
ஆடு கிடந்த இடமும், அகம்படியான் இருந்த இடமும் உருப்படாது.
980 ஆடு கெட்டவன் ஆடித்திரிவான், கோழி கெட்டவன் கூவித் திரிவான்.

ஆடு கொடாத இடையன் ஆவைக் கொடுப்பானா?
ஆடு கொடுக்காத இடையன் பசு கொடுப்பானா?
ஆடு கொழுக்கிறது எல்லாம் இடையனுக்கு இலாபம்.
ஆடு கோனின்றித் தானாய்ப் போகுமா?
ஆடுங்காலத்துத் தலைகீழாக விழுந்தால் ஓடும் கப்பரையும் உடையவன் ஆவான்.
ஆடுங்காலம் தலைகீழாய் விழுந்தாலும் கூடும் புசிப்புத்தான் கூடும்.
ஆடுதவுமா குருக்களே? கொம்பும் குளம்பும் தவிரச் சகலமும் ஆம்.
ஆடு தழை தின்பதுபோல.
ஆடுதன் இராசாப்போல்.
990 ஆடு தின்பாளாம், இரண்டு ஆடு தின்பாளாம், ஆட்டைக் கண்டால் சீ சீ என்பாளாம்.

ஆடு நனைகிறதென்று கோனாய் (கூவிக் கூவி) அழுகிறதாம்!
ஆடு நினைத்த இடத்தில் பட்டி போடுகிறதா?
ஆடு பகையும் குட்டி உறவுமா?
ஆடு பயிர்காட்டும் ஆவிரை நெல் காட்டும்.
ஆடு பிடிக்கக் கரடி அகப்பட்டதுபோல.
ஆடு பிழைத்தால் மயிர்தானும் கொடான்.
ஆடுவதும் ஆடி அவரைக்காயும் பறித்தாச்சு.
ஆடுவதே மணியமா யிருக்கிறான்.
ஆடுவரும் பின்னே (தலை) ஆடிவரும் முன்னே.
1000 ஆடு வீட்டிலே ஆட்டுக்குட்டி காட்டிலே.

ஆடை இல்லாதவன் அரைமனிதன்.
ஆடை உடையான் அவைக்கஞ்சான்.
ஆடையைத் தின்றால் வெண்ணெய் உண்டா?
ஆட்காட்டி தெரியாமல் திருடப்போகிறவன் கெட்டிக்காரனா, அவன் அறியாமல் அவன் காலடி பிடித்துப் போகிறவன் கெட்டிக்காரனா?
ஆட்காட்டி சொந்தக்காரனையும் திருடனையும் காட்டிக் கொடுக்கும்.
ஆட்டமும் கூத்தும் அடங்கிற்று அத்தோடே.
ஆட்டம் நாலுபந்தி, புறத்தாலே குதிரை.

ஆட்டாளுக்கு ஒரு சீட்டாள், அடைப்பக்காரனுக்கு ஒரு துடைப்பக்கட்டை.
ஆட்டாளுக்கு ஒரு மோட்டாள்.
1010 ஆட்டில் ஆயிரம் மாட்டில் ஆயிரம், வீட்டிலே கரண்டி பாலில்லே.
ஆட்டின் கழுத்தறுப்புப் போல.
ஆட்டுக்கடா சண்டையில் நரி செத்ததுபோல.
ஆட்டுக்கடா முறைத்ததுபோல முறைக்கிறான்.
ஆட்டுக்கறியும் நெல்லுச்சோறும் தம்மாகும்மா, அந்தக்கடன் கேட்கப்போனால் கிய்யா மிய்யா.
ஆட்டுக்கிடையிலே கோனாய் (தோண்டான்) புகுந்ததுபோல.
ஆட்டுக்குட்டிக்கு ஆனையைக் காவு கொடுக்கிறதா?
ஆட்டுக்குட்டிமேல் ஆயிரம் பொன்.
ஆட்டுக்குட்டிமேல் ஆயிரம் பொன்னா?
ஆட்டுக்குட்டியைத் தோளிலே வைத்துக் காடெங்கும் தேடின கதைபோல.
1020 ஆட்டுக்குத் தீர்ந்தபடி குட்டிக்கும் ஆகிறது.
ஆட்டுக்குத் தோற்குமா கிழப்புலி?
ஆட்டுக்குத் தோற்ற கிழப்புலியா?
ஆட்டுக்கும் மாட்டுக்கும் இரண்டுகொம்பு, இந்த ஐயங்காருக்கு மூன்று கொம்பு.
ஆட்டுக்கும் மாட்டுக்கும் இரண்டு கொம்பு, இந்த மதிகெட்ட மாட்டுக்கு மூன்று கொம்பு.
ஆட்டுக்கும் மாட்டுக்கும் முறையா, காட்டுக்கும் பாட்டுக்கும் வரையா?
ஆட்டுக்கு வால் அளவறுத்து வைத்திருக்கிறது.
ஆட்டுக்கொத்தது குட்டிக்கு.
ஆட்டுத்தலைக்கு ஓச்சன் பறக்கிறதுபோல.
ஆட்டுரம் ஓராண்டு நிற்கும் மாட்டுரம் ஆறாண்டு நிற்கும்.
1030 ஆட்டெரு அந்த வருடம் மாட்டெரு மறு வருடம்.
ஆட்டுவித்துப் பம்பை கொட்டுகிறான்.
ஆட்டுவெண்ணெய் ஆட்டு மூளைக்கும் காணாது.
ஆட்டைக்காட்டி வேங்கை பிடிக்கப் பார்க்கிறான்.
ஆட்டைக்கொரு முறைகாண சோட்டை இல்லையோ?
ஆட்டைத் தேடி அயலார்கையிற் கொடுப்பதைப் பார்க்க வீட்டைக்கட்டி நெருப்பு வைப்பது நல்லது.
ஆணமும் கறியும் அடுக்கோடே வேண்டும்.
ஆணவத்தால் அழியாதே.
ஆணாய்ப் பிறந்தால் அருமை, பெண்ணாய்ப் பிறந்தால் எருமை.

ஆணிக்கு இணங்கின பொன்னும், மாமிக்கு இணங்கின பெண்ணும் அருமை.

1040 ஆணுக்கு அவகேடு செய்தாலும் பெண்ணுக்குப் பிழை சொல்லலாகாது.

ஆணுக்குப் பெண் அத்தமிச்சுப் போச்சுதா?

ஆணை அடித்துவளர்க்க, பெண்ணைப் போற்றிவளர்க்க.

ஆணையும் வேண்டாம், சத்தியமும் வேண்டாம், துணியைப் போட்டுத் தாண்டு.

ஆண் கேடு அரசுகேடு உண்டோ?

ஆண்சிங்கத்தை யானை அடுக்குமா?

ஆண்டபொருளை அறியாதார் செய்தவம் மாண்ட மரத்துக்கு அணைத்த மண்.

ஆண்டாரன்னத்தை அதிரப் பிடிக்கவும் போகாது, செட்டியார் எட்டிக் கன்னத்தில் அடிக்கவும் போகாது.

ஆண்டாருக்கும் பறப்பு, கோவிலுக்கும் சிறப்பு.

ஆண்டாரைப் பூதமஞ்சும் மாண்டாலொழியப் போகாது.

1050 ஆண்டார் இருக்குமட்டும் ஆட்டமும் கூத்தும்.

ஆண்டி எப்போ சாவான், மடம் எப்போ ஒழியும்?

ஆண்டிகள் மடம் கட்டுகிறதுபோல.

ஆண்டிகிடப்பான் மடத்திலே, அவன் சோளி கிடக்கும் தெருவிலே.

ஆண்டி குண்டியைத் தட்டினல் பறப்பது சாம்பல்.

ஆண்டிக்கு இடச்சொன்னல், தாதனுக்கு இடச்சொல்லு

ஆண்டிக்குக் கொடுக்கிருயோ, சுரைக்குடுக்கைக்குக் கொடுக்கிருயோ?

ஆண்டிக்குப் பிச்சையா, அவன் குடுவைக்குப் பிச்சையா?

ஆண்டிக்கு வாய்ப்பேச்சு, பார்ப்பானுக்கு அதுவும் இல்லை.

ஆண்டி சொன்னல் தாதனுக்குப் புத்தி எங்கே போயிற்று?

1060 ஆண்டிச்சி பெற்றது அஞ்சும் குரங்கு (அவலம்).

ஆண்டிமகன் ஆண்டியானல், நேரம் அறிந்து சங்கு ஊதுவான்.

ஆண்டியும் ஆண்டியும் கட்டிக்கொண்டால், சாம்பலும் சாம்பலும் ஒட்டிக்கொள்ளும்.

ஆண்டியும் தாதனும் தோண்டியும் கயிறும்.

ஆண்டியே அன்னத்திற்கு அலையச்சே, லிங்கம் பால்சோற்றுக் கழுகிறதாம்.

ஆண்டியை அடித்தாலும், அவன் குடுவையைப் போட்டுடைத்தாலும்.

ஆண்டியைக் கண்டால் லிங்கன் என்கிறான், தாதனைக் கண்டால் ரங்கன் என்கிறான்.
ஆண்டி வேடம் போட்டும் அலைச்சல் தீரவில்லை.
ஆண்டு மறுத்தால் தோட்டியும் கும்பிடான்.
ஆண்டு மாறின காரும் அன்று அறுத்த சம்பாவும் ஊன் கண்ணுக்கு அரிது.
1070 ஆண்டை கூலியைக் குறைத்தால், சாம்பான் வேலையைக் குறைப்பான்.

ஆண்டைமேற் கோபம் கடாவின்மேல் ஆற்றினன்.
ஆண்பிள்ளைகள் ஆயிரம் ஒத்திருப்பார்கள், அக்காள் தங்கச்சி ஒத்திரார்கள்.
ஆண்பிள்ளைச் சிங்கத்திற்கு ஆர் நிகர்?
ஆண்முந்தியோ பெண்முந்தியோ?
ஆண்மையற்ற வீரன் ஆயுதத்தின்மேற் குறை சொல்லுவான்.
ஆதரவற்ற வார்த்தையும ஆண்கடாவாத மரமும பலன் செய்யா.
ஆதாயமில்லாமல் செட்டி ஆற்றைக்கட்டி இறைப்பானா?
ஆதாயமில்லாமல் செட்டி ஆற்றோடே போகிறானாம்.
ஆதாயமே செலவு அறையிருப்பே நிலுவை.
1080 ஆதித்தன் தெற்குவடக் காணாலும் சாதித்தொழில் (சனித்தொழில்) ஒருவரையும் விடாது.

ஆதி முற்றினால் வியாதி.
ஆதியந்தமில்லா அருமைப் பொருளே கர்த்தன்.
ஆதீனக் காரனுக்குச் சாதனம் வேண்டுமா?
ஆத்தாளும் மகளும் காத்தானுக் கடைக்கலம், அவன் காத்தாலும் காத்தான், கைவிட்டாலும் விட்டான்.
ஆத்தாளை அக்காளைப் பேசுகிறதில் கோபமில்லை, ஆமுடையாளைப் பேசுகிறதற்குத்தான் கோபம் பொங்கிப் பொங்கி

ஆத்தாள் அம்மணம் அன்றாடம் கோதானம்.
ஆத்தாள் அம்மணம் கும்பகோணத்தில் கோதானம்.
ஆத்தாள் என்றால் சும்மாவிருப்பான், அக்காள் என்றால் சும்மாவிருப்பான், பெண்டாட்டி என்றால் மீசைமேல் கைபோட்டுச் சண்டைக்கு வருவான்.
ஆத்தி நாரு கிழித்தாற்போல் உன்னைக் கிழிக்கிறேன்.
1090 ஆஸ்தியில்லாதவன் மனிதன் அல்லாதவன்.

ஆஸ்தியுள்ளவனுக்கு நாசமில்லை.
ஆஸ்தியுள்ளவன் ஆஸ்திக்கு அடிமை.

ஆத்திரக்காரனுக்குப் புத்திமட்டு.
ஆத்திரக்காரன் கோத்திரம் அறிவானா?
ஆத்திரத்தை அடக்கினாலும் மூத்திரத்தை அடக்கப்படாது.
ஆத்திரமுடையோன் கோத்திரமறியான்.
ஆத்திரம் பெரிதானாலும் புத்தி மிகப்பெரிது.
ஆத்திரம் பெரிதானாலும் மூத்திரம் பெரிது.
(ஆத்தும சுத்தியாகிய) நெஞ்சிலக்கணந் தெரியாதவனுக்குப் பஞ்சலக்கணந் தெரிந்து பலனென்ன?
1100 ஆத்தை படுகிற பாட்டுக்குள்ளே மகன் மோருக்கு அழுகிறான்.

ஆந்தை சிறிது கீச்சுப் பெரிது.
ஆந்தை பஞ்சையாயிருந்தாலும் சகுனத்திற் பஞ்சை யில்லை.
ஆந்தை விழிக்கிறதுபோல விழிக்கிறான்.
ஆபத்தி லறியலாம் அருமைச் சினேகிதனை.
ஆபத்திலே சிநேகிதனை அறி.
ஆபத்திற் காத்தவன் ஆட்சி யடைவான்.
ஆபத்துக்கு உதவாத பெண்டாட்டி அழகுக்கா வைத்திருக்கிறது?
ஆபத்துக்கு உதவினவனே பந்து.
ஆபத்துக்கு உதவுவானா அவசாரி ஆமுடையான்?
1110 ஆபத்துக்குப் பாவ மில்லை.

ஆபத்தும் சம்பத்தும் ஆருக்கு முண்டு.
ஆப்பைப் பிடுங்கின குரங்கு நாசம் அடைந்ததுபோல.
ஆமணக்கு முத்து ஆணிமுத்தாமா?
ஆமணக்கும் பருத்தியும் அடர விதைப்பானா?
ஆமணக்கு விதைத்தால் ஆச்சா முளைக்குமா?
ஆமுடையானுக் கில்லாத வெட்கம் அடுத்த வீட்டுக்காரனுக்கென்ன?
ஆமுடையானுக்கு அழுதகுறை அந்தகன் வந்து வாய்த்தான்.
ஆமுடையானுக்குத் தக்க இருமாப்பு.
ஆமுடையானுக்குப் பொய் சொன்னாலும், அடுப்புக்குப் பொய் சொல்லலாமா?
1120 ஆமுடையானைக் கொன்ற அற நீலி.

ஆமுடையானை நம்பி அவசாரி ஆடலாமா?
ஆமுடையானை வைத்துக்கொண்டல்லவோ அவசாரி ஆடவேண்டும்?
ஆமுடையான் அடித்ததற்குக் கொழுநனைக் கோபித்துக் கொண்டாளாம்.

ஆமுடையான் அடித்தது பெரிதல்ல ; சக்களத்தி சிரிப்பாளென்றழுகிறேன்.
ஆமுடையான் கோப்பில்லாக் கூத்தும் குருவில்லா ஞானமும் போலிருக்கிறான்.
ஆமுடையான் செத்தபோதே அல்லலுற்ற கஞ்சி.
ஆமுடையான் செத்தவளுக்கு மருத்துவச்சி நயமேன் ?
ஆமுடையான் செத்து ஆவிபறக்கச்சே, (அவதிப்படச்சே) அண்டை வீட்டுக்காரன் அக்குளிலே பாய்ச்சுகிறான்.
ஆமுடையான் பலமுண்டானால், குப்பை யேறிச் சண்டை போடலாம்.
1130 ஆமுடையான் வட்டமாய்ஓடினாலும் வாசலால் வரவேண்டும்.
ஆமுடையான் வைததைப்பற்றி அயல்வீட்டுத் தச்சனைக் கோணல் நிமிர்த்தச் சொன்னாளாம்.
ஆமென்ற தோடம் கனத்தது வயிற்றிலே.
ஆமை எடுக்கிறது (சுடுகிறது) மல்லாத்தி, நாமதைச் சொன்னால் பொல்லாப்பு.
ஆமை கிணற்றிலும் அணில் கொம்பிலும்.
ஆமை திடரில் ஏறினாற் போல.
ஆமை பிடிப்பார் மல்லாத்துவார், நாம் அது சொன்னாற் பாவம்.
ஆமை புகுந்த வீடும் அமினா நுழைந்த வீடும் உருப்படாது.
ஆமையுடனே முயல் முட்டை இடப்போய்க் கண்பிதுங்கிச் செத்ததாம்.
ஆய உபாயம் அறிந்தவன் அரிதல்ல வெல்வது.
1140 ஆயக்காரனுக்குப் பிரமஹத்திக்காரன் சாட்சி.
ஆயக்காரன் அஞ்சுபணம் கேட்பான், அதாவெட்டுக்காரன் ஐம்பது பணம் கேட்பான்.
ஆயத்திலும் நியாயமாய்ப் போகவேண்டும்.
ஆயத்துக்குக் குதிரை, கீயத்துக்குக் குட்டி.
ஆயத்துக்குப் பயந்து ஆற்றிலே நீந்தினது போல.
ஆயத்துறையில் அநியாயம் செய்யாதே.
ஆய வஞ்சனை பிறர் வஞ்சனை ஒருவருக்கும் ஆகாது.
ஆயன் அமைப்பை ஆராலும் தள்ளக்கூடாது.
ஆயிரங்கலம் நெல்லுக்கு ஓர் அந்துப்பூச்சி போதும்.
ஆயிரங் காலத்துப் பயிராச்சுதே.
1150 ஆயிரங்காலே அரைக்காற் பணம்.
ஆயிரங் குணம் ஒரு லோப குணத்தால் கெட்டும்.
ஆயிரங் குதிரையை அறவெட்டின சிப்பாய்தானா இப்போ பறைச்சேரி நாயோடே பங்கமழிகிறான் ?
ஆயிரத்திலே பிறந்து ஐந்நூற்றிலே கால் நீட்டினதுபோல.

ஆயிரத்தில் ஒருவனே அலங்கார புருடன்.
ஆயிரம் அரைக்காற் பணம்.
ஆயிரம் உடையார் அமர்ந்திருப்பார், கந்தைபொறுக்கி தொந் தோம் தொந்தோம் என்று கூத்தாடுவான்.
ஆயிரம் உடையான் அமர்ந்திருக்கும், அரைப்பண முடை யான் ஆடிவிழும்.
ஆயிரம் கட்டு அண்டத்தைத் தாங்கும்.
ஆயிரம் கட்டு ஆனைப் பலம்.
1160 ஆயிரம் கப்பியில் நழுவின கப்பி.
ஆயிரம் காக்கைக்கு ஒரு கல்.
ஆயிரம் காக்கைக்குள் ஓர் அன்னம் அகப்பட்டது.
ஆயிரம் கோவிந்தம் போட்டாலும், அமுது படைக்கிறவனுக் கல்லவோ தெரியும் வருத்தம்.
ஆயிரம் சொல்லுக்கு அரை எழுத்து.
ஆயிரம் சொன்னாலும் அவசாரி சமுசாரி யாகாள்.
ஆயிரம் நட்சத்திரம் கூடினாலும் ஒரு சந்திரன் ஆகாது.
ஆயிரம் நற்குணம் ஒரு லோப குணத்தால் கெடும்.
ஆயிரம் பசுக்களில் ஒரு பசு உதைத்துக் கொண்டால் நட்டமா?
ஆயிரம் பட்டும் அவமாச்சு, கோயிலைக் கட்டியும் குறை யாச்சு.
1170 ஆயிரம் பனையுள்ள அப்பனுக்குப் பிறந்தும் பல்லுக்குத்த ஓர் ஈர்க்கு இல்லை.
ஆயிரம் பாம்பிலகப்பட்ட தேரைபோல் தவிக்கிறேன்.
ஆயிரம் பாம்பினுள் ஒரு தேரை அகப்பட்டாற்போல.
ஆயிரம் பேரிடத்தில் சினேகம் பண்ணினாலும் ஆண் பிள்ளை களுக் கென்ன?
ஆயிரம் பேரைக் கொன்றவன் அரைவைத்தியன்.
ஆயிரம் பேர் கூடினாலும் ஓர் அந்துப் பூச்சியைக் கொல்லக் கூடாது.
ஆயிரம் பொய் சொல்லி ஒரு கலியாணம் செய்துவை.
ஆயிரம் பொய் சொல்லி ஒரு கோயிலைக் கட்டு.
ஆயிரம்பொன் பெற்ற குதிரைக்கு அரைப்பணத்துச்சவுக்கு.
ஆயிரம்பொன் பெற்ற குதிரைக்கும் சவுக்கடி வேண்டும்.
1180 ஆயிரம்பொன் பெற்ற யானை பல் விளக்குகிறதா?
ஆயிரம்பொன் போட்டு யானைவாங்கி அரைப்பணத்து அங்குசத்துக்குப் பால்மாறுகிறதா?
ஆயிரம் மாகாணி அறுபத்திரண்டரை.
ஆயிரம் ரூபா முதலில்லாமல் பத்துரூபா வட்டி நட்டம்.
ஆயிரம் வந்தாலும் ஆத்திரம் ஆகாது.

## 8. Sri H. Ananta Murthy Shastrigal

### AVIDYA

2. (1, 2, 3) Adhyasa is nowhere found to have been mentioned in the Bhashyas as having a beginning. On the contrary, it is expressly proclaimed to be beginningless. Hence Adyasa demands no cause, since causality implies time, and there is no time which is not itself the result of Adhyasa.

In my Sanskrit paper, I have explained away all the passages in Shankara and Gaudapada, which are likely to be misunderstood as implying that Adhyasa is the cause of something else or else requires a cause. All causality is within the region of Adhyasa and not beyond it. If it were otherwise, knowledge of Brahman could not disperse or destroy Samsara, and Vedanta would cease to be a science of Reality resting on universal experience, and not at all distinguishable from theology resting on mere faith.

2. (4) It is the potential seed of names and forms alone that has been denoted by words like Maya, Prakriti, Akshara and Avyakta. If it were identical with Avidya, expressions like 'Avidyakrita' (created by Avidya) as applied to Maya, would have to be interpreted to mean 'Avidya produced by Avidya'! Sentences containing such expressions clearly imply Adyasta (super-imposed). Hence Mulavidya so-called, since it is identical with Prakriti or Maya, is itself a phenomenon within the range of Adhyasa. Shankara on Brahma Sutra 1-4-3, makes this distinction quite clear. Attempts at explaining the

Bhashya in other ways, have been shown by me to be futile. This argument applies to the expression 'अविद्याकृतनामरूपमायास्वरूपेण' too, found in the Bhashya on G. K. 1-6. Strained efforts to establish Mulavidya as necessary to explain certain Vedantic principles, can all be disposed of in like manner.

## PRATIBHASIKA OBJECTS

4. (2) Bhashya passages, cited in the Vignapti, are all definite in their implications. मन्येत ( He merely fancies), रज्जुरेव ( a rope and nothing else ), emphatically deny the objects fancied. The third quotation 'न तलमलिनतादिविशिष्टमेव परमार्थतः' (not really darkened at the bottom) seems to yield also to the interpretation that only the empirical dark colour is denied and not the seeming colour ; but so long as clear support for Pratibhasika objects is not forthcoming, this doubtful interpretation is of course ruled out. Moreover, when right knowledge comes on, nobody feels 'here was a Pratibhasika thing now removed by knowledge'. It is common knowledge that the universal feeling on such occassions, is 'there never was any such object ; I only fancied some such thing to be there.' The other citations in the Vignapti require no comment.

## AVIDYA IN SLEEP

6. (1, 2) The extract from the Brihadaranyaka Bhashya is a clincher here. 'अविद्याकामकर्माणि न सन्ति' can only mean there is no Avidya.

This cannot be interpreted to mean only Adhyasa and not Bhavavidya, for the latter is nowhere unambiguously recognized in the Bhashya.

ஆவுடையாரையும் லிங்கத்தையும் ஆறுகொண்டு போகச்சே, சுற்றுக்கோவிற் சுவாமியெல்லாம் சர்க்கரைப் பொங்கலுக் கழுகிறதாம்.
ஆவும் தென்னையும் (தேவும்) ஐந்து வருடத்தில் பலனீயும்.
ஆவென்று போனபின் அள்ளி இடுவது ஆர்?
ஆ வேறு நிறமானாலும், பால் வேறு நிறமாமோ?
ஆழ உழுது அடர விதை.
ஆழமறியாமல் காலிட்டுக் கொண்டேன், அண்ணாமலையப்பா காலைவிடு.
ஆழமறியும் ஓங்கில், மேளம் அறியும் அரவம்.
ஆழம் தெரியாமல் காலையிட்டுக் கொண்டதுபோல.
ஆழாக்கு அரிசி மூவாழாக்குப் பானை, முதலியார் வருகிற விஜூப்பைப் பாரு.
1260 ஆழும் பாழும் அரைக்கீரைப் பாத்தியும்.

ஆளக்கண்ட சமுத்திரம்.
ஆளமாட்டாதவனுக்குப் பெண்டேன்?
ஆளனில்லாத துக்கம் அழுதாலும் தீராது.
ஆளனில்லாத பெண்ணுக்கு வாழ்வில்லை.
ஆளனில்லாதவள் ஆற்றுமணலுக்குச் சரி.
ஆளனைப் பிரிந்திருத்தல் அரிவையர்க் கழகன்று.
ஆளான ஆட்களுக்கு அவிழ் அகப்படாக் காலத்திலே காக் காய்ப் பிசாசு கஞ்சிக்கு அழுகிறது.
ஆளான ஆள் புகுந்தால் ஆமணக்கும் விளக்கெண்ணெ யாகும்.
ஆளில்லாமல் அடிக்கடி ஓடுமா?
1270 ஆளுக்கு ஒத்த ஆசாரமும் ஊருக்கு ஒத்த உபசாரமும் வேண் டாமா?

ஆளுக்கு ஒரு குட்டுக் குட்டினாலும் அவனுக்குப் புத்தி வராது.
ஆளுக்கு ஒரு குட்டுக் குட்டினால் அடியேன் தலை மொட்டை.
ஆளுக்குத் தகுந்த கொட்டுக் கொட்டுகிறது.
ஆளுக்குத் துக்குணி ஆள்பாரம்.
ஆளுக்குள்ளே ஆளாயிருப்பான்.
ஆளை அடித்தால் அரைப்பணம்.
ஆளை அறிந்துதான் அறுக்கிறான்.
ஆளை ஆள் அறியவேண்டும், மீனைப் புளியங்காய் அறிய வேண்டும்.
ஆளை ஆள் குத்தும், ஆள் மிடுக்கு பத்துப்பேரைக் குத்தும்.
1280 ஆளை ஆள் குத்தும் ஆள் மிடுக்கு, பத்துப்பேரைக் குத்தும் பணமிடுக்கு.

ஆளைக் கண்டு ஏமாற்றுமாம் ஆலங்காட்டுப் பேய்.
ஆளைச் சுற்றிப் பாராமல் அளக்கிறதா?
ஆளைச் சுற்றிப் பார்க்காமல் அழுகிறாள் ஒருகாலே.
ஆளைச் சேர்த்தாயோ அடிமையைச் சேர்த்தாயோ?
ஆளை நீட்டிப் போடு.
ஆளைப் பார்த்தால் அழகுமலை, வேலையைப் பார்த்தால் இழவு மலை.
ஆளைப் பார்த்தான் வாயில் எய்த்தான்.
ஆளைப் பார்த்துக் கூலி கேட்கிறது, அடளைப் பார்த்துப் பெண்டு கேட்கிறது.
ஆளைப் பார் முகத்தைப் பார்.
1290 ஆள் ஆளை இடிக்கும், ஆள் மிடுக்கு பத்துப்பேரை இடிக்கும்.
ஆள் இருக்கக் கொலை (குலை) சாயுமா?
ஆள் இல்லா ஊருக்கு அழகு பாழ்.
ஆள் இல்லாப் படை அம்பலம்.
ஆள் இல்லாமல் ஆயுதம் வெட்டுமா?
ஆள் இளந்தலைக் கண்டால் தோணி மிதக்கப் பாயும்.
ஆள் இளந்தலைக் கண்டு தோணி மிதக்கும்.
ஆள் இளப்பமா யிருந்தால் (ஏமாந்தவனானால்) எமனையும் நமனையும் பலகாரம் பண்ணுவான்.
ஆள் இளப்பமா யிருந்தால் எருது மச்சான் முறை கொண்டாடும் (கொள்ளும்).
ஆள் ஏற நீர் ஏறும்.
1300 ஆள் கண்டு எய்க்குமாம் (மிரட்டுமாம்) ஆலங்காட்டு நரி.
ஆள் கொஞ்சமாகிலும் ஆயுதம் மிடுக்கு.
ஆள்மெத்தக் கூடினால் மீன்மெத்தப் பிடிக்கலாம்.
ஆறல்ல நூறல்ல ஆகிறது ஆகட்டும்.
ஆறாம்பேறு பெண்ணாய்ப் பிறந்தால் ஆறான (ஆகிற) குடித்தனம் நீறாய்விடும்.
ஆறிலும் சாவு நூறிலும் சாவு.
ஆறினகஞ்சி பழங்கஞ்சி.
ஆறின புண்ணிலும் அசடு நிற்கும்.
ஆறினால் அச்சிலே வார், ஆறாவிட்டால் மிடாவிலே வார்.
ஆறு கடக்கிறவரையில் அண்ணன் தம்பி, ஆறு கடந்தால் நீ யார் நானார்?
1310 ஆறு கலியாணம் மூன்று பெண்கள் மாரோடு மார் தள்ளுண்

ஆறுகாதம் என்கிறபோதே கோவணத்தை (அவிழ்ப்பானேன்.) அவிழ்த்துக் குடுமியிலே கட்டிக்கொண்டானாம்.

ஆறு கெட நாணல் இடு, ஊரு கெட நூலை இடு, காடு கெட ஆடு விடு, மூன்றுங்கெட முதலியை (முதலையை) விடு.
ஆறு கொண்டது பாதி, தூறு கொண்டது பாதி.
ஆறு நிறைய நீர் போனாலும், நாய் நக்கித்தான் குடிக்க வேண்டும்.
ஆறு நிறைய நீர் போனாலும், பாய்கிறது கொஞ்சம் சாய்கிறது கொஞ்சம்.
ஆறு நீந்தின எனக்குக் குளம் நீந்துவது அரிதோ?
ஆறு நீந்தினவனுக்கு வாய்க்கால் எம்மாத்திரம்?
ஆறு நேராய்ப் போகாது.
ஆறு நேரான ஊரும், அரசனோடெதிர்த்த குடியும், புருடனோடேறுமாறான பெண்டிரும் நீறு நீறாகிவிடும்.
1320 ஆறு நேரான ஊர் நிலை நில்லாது.

ஆறு பார்க்கப்போக ஆய்ச்சிக்குப் பிடித்தது சலுப்பு.
ஆறு பார்ப்பானுக்கு இரண்டு கண்ணு.
ஆறு போவதே கிழக்கு, அரசன் சொல்வதே வழக்கு.
ஆறு போவதே போக்கு, அரசன் சொல்வதே தீர்ப்பு.
ஆறுமாதத்துக்குச் சனியன் பிடித்தாற்போல.
ஆறுமாதப் பயணம் அஞ்சி நடந்தால் முடியுமா?
ஆறு மாதம் வீட்டிலே, ஆறு மாதம் காட்டிலே.
ஆறும் கடன், நூறும் கடன் பெருக்கச் சுட்டா பணிகாரத்தை.
ஆறும் நாலும் பத்து, நாலும் ஆறும் பத்து.
1330 ஆறு வடிவிலேயும் கருப்பு தெளிவிலேயும் வருத்தம்.

ஆறெல்லாம் கண்ணீர், அடியெல்லாம் செங்குருதி.
ஆற்றருகிலிருந்த வாழ்வும் அரசறிந்த வாழ்வும் நிலையல்ல.
ஆற்றாக்குலைப் பொல்லாப்பு அடித்துக்கொள்ளுகிறான்.
ஆற்றித்தூற்றி அம்பலத்திலே வைக்கப்பார்க்கிறாள்.
ஆற்றிலே ஆயிரம் காணி (குழி) தானம் பண்ணினாற்போல.
ஆற்றிலே ஊறுகிறது மணலில் சுவறுகிறது.
ஆற்றிலே ஒருகாலும் சேற்றிலே ஒருகாலும்.
ஆற்றிலே கணுக்கால் தண்ணீரிலும் அஞ்சி நடக்கவேண்டும்.
ஆற்றிலே போகிற தண்ணீரை, அப்பா குடி, ஆத்தாள் (அம்மா) குடி.
1340 ஆற்றிலே போட்டாலும் அளந்து போடு.

ஆற்றிலே விட்ட தர்ப்பைபோல் தவிக்கிறேன்.
ஆற்றிலே விளைகிறது மணலிலே சிதறுகிறது.
ஆற்றிற் கரைத்த புளிபோல.
ஆற்றிற் கரைத்த புளியும் அங்காடிக்கிட்ட பதருமாயிற்று.

ஆற்றிற் கரைத்த பெருங்காயம் போல.
ஆற்றிற் பெருவெள்ளம் நாய்க்கென்ன ? சளப்புத் தண்ணீர்.
ஆற்றுக்கு நெட்டையும் சோற்றுக்குக் குட்டையும் வாசி.
ஆற்றுக்குப் பார்ப்பான் துணையா ? சோற்றுக்குப் பயற்றங் காய் கறியா ?
ஆற்றுக்குப்போனதும் இல்லை, செருப்பைக் கழற்றினது
1350 ஆற்றுக்கும் பயம் காற்றுக்கும் பயம்.
ஆற்றுதே, என்னைத் தேற்றுதே, அம்பலத்தில் என்னை ஏற்றுதே என்றான்.
ஆற்று நிறையத் தண்ணீர் போனாலும், அள்ளிக்குடிக்கப் போகுதா நாய் ?
ஆற்று நீரை நாய் நக்கிக்குடிக்குமோ எடுத்துக் குடிக்குமோ ?
ஆற்று நீர் ஊற்றி அலைசக் கழுவினாலும் வேற்று நீர் வேற்று நீர்தான்.
ஆற்றுப் பெருக்கும் அரசும் அரை நாழி.
ஆற்றுமணலிலே தினம் புரண்டாலும் ஒட்டுகிறதுதான் ஒட்டும்.
ஆற்று மணலை அளவிடக்கூடாது.
ஆற்று மணலையும் ஆகாயத்து நட்சத்திரத்தையும் அளவிடப் படுமோ ?
ஆற்றுவாருமில்லை தேற்றுவாருமில்லை.
1360 ஆற்றை கடத்திவிடு, ஆகாயத்திற் பறக்கக் குளிகை தரு கிறேன் என்கிறான்.
ஆற்றைக் கடந்தால் ஓடக்காரனுக்கு ஒரு சொட்டு.
ஆற்றைத் தாண்டியல்லவோ கரையேறவேண்டும் ?
ஆற்றோடே போகிறான் நல்ல வேலைக்காரன்.
ஆற்றோடே போனாலும் போகிறதேயல்லாமல் தெப்பக்கார னுக்கு ஒரு காசு கொடுக்கிறதில்லை.
ஆனகுலத்திற் பிறந்து ஆட்டை மாட்டை மேய்க்காமல், ஓலை வாரியாய்ப் போனாயே ?
ஆனதல்லாமல் ஆவதுமறிவரோ ?
ஆனதுக்கு ஒரு ஆகாதது, ஆகாததற்கு ஒரு ஆனது.
ஆனதெய்வத்தை ஆறு கொண்டுபோகிறது, அனுமந்தராய னுக்குத் தெப்பத்திருவிழாவா ?
ஆனமட்டும் ஆதாளி யடித்துப்போட்டு, ஆந்தைபோல் விழிக் கிறான்.
1370 ஆன முதலை அழித்தவன் மானமிழப்பது அரிதல்ல.

ஆனவன் ஆகாதவன் எல்லாவற்றிலும் (எங்கும்) உண்டு
ஆனால் அச்சிலே வார்; ஆகாவிட்டால் மிடாவிலே வார்.
ஆனால் ஆதித்தவாரம் ஆகாவிட்டால் சோமவாரம்.
ஆனால் பிரம்மருடி ஆகாவிடில்—.
ஆனி அடியிடாதே கூனி குடிபோகாதே.
ஆனி அரை ஆறு, ஆவணி முழு ஆறு.
ஆனி அறணை வால்பட்ட கரும்பு ஆனைவால் ஒத்தது.
ஆனி ஆனை வாலொத்த கரும்பு.
ஆனை அசைந்து தின்னும், வீடு அசையாமல் தின்னும்.
1380 ஆனை ஆசாரவாசலைக் காக்கும், பூனை புழுத்த மீனைக் காக்கும்.
ஆனை ஆயிரம் பெற்றால் அடியும் ஆயிரம் பெறுமா?
ஆனை இருந்து அரசாண்ட இடத்திலே பூனை இருந்து புலம்பி அழுகிறது.
ஆனை இலைக்கறி, பூனை பொரிக்கறி.
ஆனை உண்ட விளாங்கனிபோல.
ஆனை உபரம் பூனை ஆகுமா?
ஆனை ஏறித் திட்டிவாசலில் நுழைவதுபோல.
ஆனை ஏறியும் சந்து வழி நுழைவானேன்?
ஆனை ஒரு குட்டிபோட்டும் பலன், பன்றி பலகுட்டி போட்டும் பலனில்லை.
ஆனை கட்டச் சங்கிலி தானெடுத்துக் கொடுத்தாற்போல.
1390 ஆனை கட்டத் தாள், வான முட்டப்போர்.
ஆனை கண்ட பிறவிக்குருடர் அடித்துக்கொண்டதுபோல.
ஆனை கறுத்தால் ஆயிரம் பொன்.
ஆனை கறுத்தால் ஆயிரம் பொன், ஒட்டை கறுத்தால் உதவியென்ன?
ஆனை கறுத்திருந்தும் ஆயிரம் பொன் பெறும்.
ஆனை காணாமற்போனால், குண்டுச்சட்டியிற் தேடினால் அகப்படுமா?
ஆனை குட்டிபோடும் என்று நம்பி லத்தி போட்டதுபோல.
ஆனை குண்டுச் சட்டியிலும் குழியிலும் உண்டோ?
ஆனைகுத்தும் தோட்டிக்குப் பிணக்கா?
ஆனைகேடு அரசுகேடு உண்டோ?
1400 ஆனை கேட்ட வாயால் ஆட்டுக் குட்டி கேட்கிறதா?
ஆனை கொடிற்றில் அடக்குகிறதுபோல எந்தமட்டும் அடக்குகிறது?
ஆனை கொடுத்தும் அங்குசத்திற்குப் பிணக்கா?

ஆனைக் கவடும் பூனைத் திருடும்.
ஆனைக் கிட்டுக் கெட்டவன் குடத்தில் கைபட்டாற்போல.
ஆனைக்கில்லை கானலும் மழையும்.
ஆனைக்கு அறுபது முழம், அறக்குள்ளனுக்கு எழுபது முழம்.
ஆனைக்கு ஒருகாலம், பூனைக்கு ஒருகாலம்.
ஆனைக்குக் கோவணம் கட்டினாற்போல.
ஆனைக்குச் சிட்டுக்குருவி மத்தியஸ்தம் போனாற்போல.
1410 ஆனைக்குத் தீனியிடும் வீட்டில் ஆட்டுக்குட்டிக்குப் பஞ்சமா?
ஆனைக்குத் துறடும் அன்னத்துக்கு மிளகாயும் வேண்டும்.
ஆனைக்குத் தேரை இட்டதுபோல.
ஆனைக்குத் தேரை ஊனா?
ஆனைக்கு முண்டு அவகேடு.
ஆனைக்கும் அடிசறுக்கும்.
ஆனைக்கும் பானைக்கும் சரி.
ஆனைக்கும் புலிக்கும் நெருப்பைக் கண்டால் பயம்.
ஆனைக்கு வேகிறவீட்டில் பூனைக்குச் சோறில்லையாம்.
ஆனைக் கூட்டத்திற் சிங்கம் புகுந்ததுபோல.
1420 ஆனை செத்தாலும் ஆயிரம்பொன்.
ஆனை தழுவிய கையால் ஆட்டுக் குட்டி தழுவுகிறதா?
ஆனை தன் தலையில் தானே மண்ணைப் போட்டுக்கொள்ளும்.
ஆனை தன் பல மறியாமல் மத்தகத்தால் மண்ணை வாரிப் போட்டுக் கொண்டதுபோல.
ஆனை தன்னைக் கட்டச் சங்கிலியைத் தானே கொடுத்தது போல.
ஆனை துரத்தி வந்தாலும் ஆலயத்தில் நுழையலாகாது.
ஆனை நிழல் பார்க்கத் தவளை அழுத்தாற்போல.
ஆனை படுத்தால் ஆட்டுக் குட்டிக்குத் தாழுமா?
ஆனை படுத்தால் ஆள் மட்டம்.
ஆனை படுத்தால் குதிரை மட்டமாவ திராதா?
1430 ஆனை பார்க்க வெள்ளெழுத்தா?
ஆனை புலி வந்தாலும் தாண்டுவான்.
ஆனை போகிற வழியிலே எறும்பு தாரை விட்டாற்போல.
ஆனைபோன வீதி கேட்க வேண்டுமோ?
ஆனைபோன வீதியிலே ஆட்டிக்குட்டி போகிறது வருத்தமா?
ஆனைப் பசிக்குச் சோளப்பொரி தாங்குமா?
ஆனை மதத்தால் (கொழுத்தால்) வாழைத்தண்டு, ஆண்பிள்ளை மதத்தால் கீரைத்தண்டு.
ஆனை மிதிக்கப் பிழைப்பார்களா?

ஆனை முட்டத் தாள், வான முட்டப் போர்.
ஆனை மேயும் காட்டில் ஆடு மேய இடமில்லையா ?
1440 ஆனைமே லேறுவேன் வீரமணி கட்டுவேன்.
ஆனைமேல் இடும் பாரத்தைப் பூனைமேல் இடலாமா ?
ஆனைமேல் இருக்கிற அரசன் சோற்றைவிட, பிச்சை எடுக்கிற பார்ப்பான் சோறு மேல்.
ஆனைமேல் போகிறவனைச் சுண்ணாம்பு கேட்டால் அகப்படுமா ?
ஆனைமேற் போகிறவனையும் பானையோடே தின்றானென்
ஆனையும் அறுகம் புல்லினால் தடைப்படும்.
ஆனையும் ஆனையும் முட்டும்போது இடையில் அகப்பட்ட கொசுகுபோல.
ஆனையும் நாகமும் புல்லினால் தடைப்பட்டன.
ஆனையை ஆயிரம் பொன்னுக்கு வாங்கி இருப்பு அங்குசத்திற்கு ஏமாந்து நிற்பானேன் ?
ஆனையைக் கட்டிச் சுளகாலே மறைப்பாள்.
1450 ஆனையைக் குத்திச் சுளகாலே மூடுவாள்.
ஆனையைக் கொடுத்துத் துறட்டுக்கு மன்றாடினாற்போல்.
ஆனையைக் கொன்றவன் பூனையை வெல்லமாட்டானா ?
ஆனையைத் தண்ணீரில் இழுக்கும் முதலை பூனையைத் தரையி லிழுக்குமா ?
ஆனையைத்தேடக் குடத்துக்குள் கைவைத்ததுபோல.
ஆனையைப் பிடிப்பதும் கரகத்தில் (பானையில்) அடைப்பதும், அதுவே செல்வப் பிள்ளைக் கடையாளம்.
ஆனையை வித்துவானுக்கும் பூனையைக் குறவனுக்கும் கொடு.
ஆனையை விற்றா பூனைக்கு வைத்தியம் (பரிகாரம்)
ஆனையை விற்றுத் துறட்டிக்கு மன்றாடுகிறான்.
ஆனை லத்தி ஆனை யாகுமா ?
1460 ஆனைவரும் பின்னே மணி ஓசை (ஆடி) வரும் முன்னே.
ஆனை வாயிலேபோன கரும்புபோல.
ஆனை வால்பிடித்துக் கரை ஏறலாம், ஆட்டின் வால்பிடித்துக் கரை யேறலாமா ?
ஆனை விழுங்கிய அம்மையாருக்குப் பூனை சுண்டாங்கி.
ஆனை விழுந்தாலும் குதிரைமட்டம்.
ஆனை விழுந்தாற் கொம்பு, புலி விழுந்தால் தோல்.
ஆனைவேகம் அடங்கும் அங்குசத்தில்.

இகழ்ச்சியுடையோன் புகழ்ச்சியடையான்.
இக்கரை மாட்டுக்கு அக்கரை பச்சை.
இக்கரையில் பாகலைப்போட்டு அக்கரையில் கொழுகொம்பு வைக்கிறான்.
1470 இங்கிதம் தெரியாதவனுக்குச் சங்கீதம் தெரிந்து பலனென்ன?
இங்கு இருந்த பாண்டம்போல.
இங்கும் புதையலிருக்குமா ரங்கா? அதற்குச் சந்தேகமா வெங்கா?
இங்கே தலை காட்டுகிறான், அங்கே வால் காட்டுகிறான்.
இங்கே வா நாயே யென்றால், மூஞ்சியெல்லாம் நக்குகிறது.
இசலிக்கொண்டே என்னோடே நிற்கிறான்.
இசைவில்லாப்பாட்டு இழுக்கு.
இசைவு வந்தது வடமலையப்பா.
இச்சிக்கொண்டே என்னோடே நிற்கிறான்.
இச்சித்தகாரியம் இரகசியமல்லவே.
1480 இச்சைச்சொல் யாசகத்தால் இடர்ப்பட்டவனில்லை.
இச்சையாகிய பாக்கியமிருக்க பிச்சைக்குப் போவானேன்?
இச்சையுமில்லை கிருபையுமில்லை.
இஞ்சி தின்கிற குரங்குபோலப் பஞ்சரிக்கிறான்.
இஞ்சி தின்ற குரங்கைப்போல.
இஞ்சி யென்றால் தெரியாதா? எலுமிச்சம் பழம்போலத் தித்திப்பாயிருக்குமே.
இஞ்சி லாபம் மஞ்சளில்.
இடக்கனுக்கு வழி யெங்கே? கிடக்கிறவன் தலைமேலே.
இடது கைக்கு வலதுகை துணை, வலது கைக்கு இடதுகை துணை.
இடது கை பிட்டத்துக் கெளிது.
1490 இடத்தைக் கொடுத்தால் மடத்தைப் பிடுங்குவான்.
இடம் அகப்படாத தோடம், மெத்தப் பதிவிரதை.
இடம் கொடுத்தால் மடம் பிடுங்குவான்.
இடம் வலம் தெரியாதவனோடு இணக்கம் பண்ணக்கூடாது.
இட வசதியில்லாத பதிவிரதை.
இடறின காலிலேயே இடறுகிறது.
இடாள் தொடாள், மக்கள்மேலே செத்த பிராணன்.
இடி ஓசை கேட்ட பாம்பு (நாகம்) போல.
இடி கொம்புக்காரன் கோழி, குசுச்சத்தத்துக்கு அஞ்சுமா?
இடிக்குக் குடை பிடிக்கலாமா?
1500 இடித்த புளி போலிருக்கிறான்.

இடித்தவள் புடைத்தவள் இங்கே யிருக்க, எட்டிப் பார்த்தவள் கொட்டிக்கொண்டு போனாளாம்.
இடித்து ஒரு கூடை இடுவதிலும் பிடிசோறு அன்பாய்ப் போடுவது போதும்.
இடி விழுந்த மரம்போல் எங்கி.
இடி விழுவானுக்கு வாழ்க்கைப்பட்டு எந்நேரமும் இடி சாமம்.
இடுகிற தெய்வம் எங்குமிடும்.
இடுகிறவள் தன்னவளானால், அடிப்பந்தியிலிருந்தாலென்ன, கடைப்பந்தியிலிருந்தாலென்ன ?
இடுப்பு ஒடிந்த கோழிக்கு உரற் குழியே கைலாயம்.
இடுப்பு சுருங்குகிறது பெண்டுகளுக்கு அழகு.
இடுப்பு வைத்த இடமெல்லாம் அடுப்பு வைத்தான்.
1510 இடும்பு செய்வார்க்கு இராப்பகலில்லை.

இடுவது பிச்சை ஏறுவது (பெறுவது) மோட்சம்.
இடுவார் பிச்சையைக் கெடுக்கிறதா ?
இடுவார் பிச்சையைக் கெடுவார் கெடுப்பார்.
இடுவாள் இடுவாள் என்று எக்குற்றிருந்தாளாம், நாழி நெல் கொடுத்து நாலாசையும் தீர்த்தாளாம்.
இடைக்கணக்கன் செத்தான், இனிப் பிழைப்பான் நாட்டான்.
இடைக்கிழவி எப்போ சாவாளோ, இடம் எப்போ ஒழியுமோ !
இடை சாய்ந்த குடம் கிடை.
இடைச்சன்பிள்ளைக்காரிக்குத் தலைச்சன்பிள்ளைக்காரி மருத்துவம் பார்த்ததுபோல.
இடைச்சி ஆத்தாள் கோனிச்சி.
1520 இடைச்சி சம்பத்தும் சாணாத்தி வாழ்வும் சரி.

இடைச்சி மாப்பிள்ளை என்றைக்கு வருவான் !
இடைத்தெருவில் கோலம் வரும்போது குசத்தெரு எங்கே என்கிறான்.
இடைப்பிறப்பும் கடைப்பிறப்பும் ஆகாது.
இடையனும் பள்ளியும் இறைத்த புலம் சாவி.
இடையன் கரடிமேல் ஆசைப்பட்டது போல.
இடையன் கலியாணம் விடியும் பொழுது.
இடையன் கெடுத்தது பாதி, மடையன் கெடுத்தது பாதி.
இடையன் புத்தி பிடரியிலே.
இடையன் பேரிலே சாத்தான் வந்த கதைபோல.
1530 இடையன் வெட்டின கொம்பு போல.

இடையாண்டியும் இல்லை குசத்தாதனும் இல்லை.
இடையூறு செய்தோன் மனையில் இருக்காது பேய் முதலாய்.
இட்ட உறவு எட்டு நாளைக்கு, நக்கின உறவு நாலு நாளைக்கு.
இட்ட எழுத்திற்குமேல் ஏற ஆசைப்பட்டால் கிடைக்குமா?
இட்ட குடியும் கெட்டு, ஏற்ற குடியும் கெட்டது.
இட்ட கையை நத்துமா, இடாத கையை நத்துமா?
இட்டதன்மேல் ஏற ஆசைப்பட்டால் கிடைக்குமா?
இட்டதில் ஒன்றும் குறையாது.
இட்டதெல்லாம் கொள்ளும் பட்டிமகன் கப்பரை.
1540 இட்டதெல்லாம் பயிராமா, பெற்றதெல்லாம் பிள்ளையாமா?

இட்டமற்ற முனியன் அட்டமத்துச் சனியன்.
இட்டவர்கள் தொட்டவர்கள் கெட்டவர்கள், இப்போது வந்தவர்கள் நல்லவர்கள்.
இட்டவன் இடாவிட்டால் வெட்டுப் பகை.
இட்ட வீட்டுக்கு இரண்டகம் நினைக்கலாமா?
இட்ட வீட்டுக்குப் பிட்டிட்டுக் கொண்டு, இடிந்த வீட்டுக்கு மண்ணிட்டுக் கொண்டு திரிகிறான்.
இட்டாருக்கு இடலும், செத்தாருக்கு அழுதலும்.
இட்டாருக்கு இட்டபலன், ஏறி யடித்தாருக்குக் கோடி பலன்.
இட்டார்க்கு இடு, செத்தார்க்கு அழு.
இட்டுக் கெட்டார் எங்குமே (உலகினில்) இல்லை.
1550 இட்டு வைத்தால் தின்னவும் எடுத்து வைத்தால் சுமக்கவும் தெரியும்.

இணக்க மில்லாதவனோடு என்ன வாது?
இணங்காரோடு இணங்குவது இகழ்ச்சி.
இணங்கினால் தித்திப்பு, பிணங்கினால் கசப்பு.
இணைபிரிந்த அன்றில் போல.
இதற்கா பயப்பட்டேன் என் ஆண்டவனே, ஆனை குதிரை வந்தாலும் தாண்டுவனே.
இது எல்லாம் பொம்மலாட்டம்.
இது என் குலாசாரம், இது என் வயிற்றுசாரம்.
இது என்ன வெள்ளரிக்காய் விற்ற பட்டணமா?
இது சொத்தை, அது புழுத்தது.
1560 இது சொத்தை, அது புளியங்காய் போல்.

இது பெரிய இடத்துப் பேச்சு.
இத்தனை அத்தனையானால், அத்தனை எத்தனை ஆகும்!
இத்தனை பெரியவன் கையைப் பிடித்தால் எப்படி மாட்டேன் என்கிறது?

இத்தனைபேர் பெண்டுகளில் என்பிள்ளைக் கொரு தாயில்லை.
இந்த அடிக்கு எந்த நாயும் சாகும்.
இந்த அமாவாசைக்கும் வெட்கமில்லை, வருகிற அமாவாசைக்கும் வெட்கமில்லை.
இந்த உலக வாழ்க்கை (வாழ்வு) சதமா?
இந்த எலும்பைக் கடிப்பானேன், சொந்தப் பல்லுப் போவானேன்?
இந்தக் கண்ணிற் புகுந்து அந்தக் கண்ணிற் புறப்படுகிறான்.
1570 இந்தக் கருப்பிற் செத்தால், இன்னும் ஒரு கருப்பு மயிரைப் பிடுங்குமா?
இந்தக் கூழுக்கா இத்தனை திருநாமம்?
இந்தக் கூழுக்கா இருபத்தெட்டு நாமம்?
இந்தச் சளுக்கனுக்கு இரண்டு பெண்சாதி, வந்தவாசிமட்டும் வல்லவாட்டு.
இந்தச் சிற்றாண்டி எனக்குத் தெவிட்டிப் போயிற்று.
இந்த நாயை ஏன் இப்படிச் செய்கிறாய்?
இந்தப் பூராயத்தில் குறைச்ச வில்லை.
இந்தப் பூனையும் பால் குடிக்குமா?
இந்தப் பெரிய கொள்ளையிலே அப்பா என்கப் பிள்ளையில்லை.
இந்தப் பெருமையும் பந்தல் அழகும் பார்த்தையா பண்ணைக்காரா?
1580 இந்தப் பையனுக்கு இந்த வீட்டு ஓதம் உறைத்துப் போய்விட்டது.
இந்த வளைவு சிக்கினால் எப்படித்தான் பிள்ளை பிழைக்கும்?
இந்த வீட்டிலே வைத்தது மாயமா யிருக்கிறது.
இந்திரனைச் சந்திரனை இலையாலே மறைப்பாள், எமதருமராசனைக் கையாலே மறைப்பாள்.
இந்திராதி தேவர்க்கும் வந்திடும் தீவினை.
இந்திரைக்கு மூத்தவள் மூதேவி.
இமைக்குற்றம் கண்ணுக்குத் தெரியாது.
இம்மியன நுண்பொருள்க ளீட்டி நிதியாக்கி, கம்மியரு மூர்வர் களிறு.
இயமன் ஒருவனைக் கொல்வான், ஏற்றம் மூவரைக் கொல்லும்.
இயற்கை வாசனையோ செயற்கை வாசனையோ?
1590 இரக்கப் போனாலும் சிறக்கப் போ.
இரக்கமில்லாதவன் நெஞ்சம் இரும்பிலும் கொடிது.
இரங்காதவர் உண்டா? பெண் என்றால் பேயும் இரங்கும்.
இரசவாதிக்கு ஏது பஞ்சம்?

இரண்டு ஆட்டிலே ஊட்டின குட்டியானுன்.
இரண்டு ஓட்த்திலே கால் வைக்கிறதா?
இரண்டு ஓடத்தில் கால்வைத்தவனைப்போல் இருக்கிறுன்.
இரண்டு கையும் போதாதென்று அகப்பையும் கட்டிக் கொண்டான்.
இரண்டு நாய்க்கு ஒரு எலும்பு போட்டாற் போல.
இரண்டு பட்ட ஊரில் குரங்கும் குடி இராது.
1600 இரண்டு பெண்டாட்டிக்காரனுக்குக் கொண்டை என்ன கொண்டை?
இரண்டு பெண்டாட்டிக்காரன் பாடு திண்டாட்டம்.
இரண்டு பெண்டாட்டிக்காரன் வீட்டில் நெருப்பேன்?
இரண்டு வீட்டிலும் கலியாணம், இடையில் செத்ததாம் நாய்க் குட்டி.
இரண்டு வீட்டு விருந்தாளி கெண்டை ஏறிச்செத்தாள்.
இரத்தினத்தைச் சேர்ந்த இழைபோல.
இரந்தும் பருந்துக்கு இடு.
இரந்தோர்க்கு ஈவது உடையார் கடன்.
இரப்பவனுக்குப் பஞ்சம் என்றைக்கும் இல்லை.
இரப்பவனுக்கு வெண் சோறு பஞ்சமா?
1610 இரப்பான் சோற்றுக்கு என்றும் பஞ்ச மில்லை.
இரவல் உடைமை இசைவாயிருக்கிறது, என் பிள்ளை ஆணை நான் கொடுக்கமாட்டேன்.
இரவல் சதமா, திருடன் உறவா?
இரவல் சேலையை நம்பி இடுப்புக் கந்தையை எறிந்தாளாம்.
இரவல் சோறு பஞ்சம் தாங்குமா?
இரவல் துணியாம், இரவல் துட்டாம், இழுத்துக் கொட்டு மேளத்தை, இறுகக்கட்டு தாலியை.
இரவி முன் பனிபோல்.
இரவியைக் கண்ட இருள் போல.
இரவிலுண்ணுமல் பகலுண்ணுதவனுக்குப் பெருத்த லில்லை.
இரவிற் போனுலும் பறக்கப் போகவேண்டும்.
1620 இராகு திசையில் வாழ்ந்தவனும் இல்லை, இராச திசையிற் கெட்டவனு மில்லை.
இராக்கண்ட கனவு (சனி) மிடாப் போல வீங்கின கதை.
இராச கீரியைக் காவுகிறது போல.
இராச சமூகத்திற்கு எலுமிச்சம்பழம் சிறப்பு.
இராசப் பயலோடே கூடித் தாதப்பயலும் கெட்டாளும்.
இராசன் ஆனுலும் தன் தாய்க்கு மகனே.
இராசன் எவ்வழி குடிகள் அவ்வழி.
இராசன் ஏறிய குதிரைக்கு மேடு ஏது பள்ள மேது?

இராசன் ஏறிய குதிரையைப் போல்.
இராசன் செங்கோல் தன் நாடுவரையில்.
1630 இராசன் மெச்சினது ரம்பை.
இராசா இருக்கப் பட்டணம் அழியுமா?
இராசா கடன்படப் புழுக்கை காடித்தண்ணீர் குடித்தது போல.
இராசா கேட்கக்கேட்க இன்னென்று புறப்படு'தென்றானும்.
இராசா மகள் ஆனாலும் கொண்டவனுக்குப் பெண்டுதான்.
இராசாவின் பலமிருந்தால் அட்டமத்துச்சனி என்ன செய்யும்?
இராசாளியைக் கண்ட கொக்குப் போல.
இராசீகம் தெய்வீகம் எப்படியோ?
இராட்சதனுக்கு ஒரு புரோட்சதன்.
இராட்டினம் வருகிறது வண்டியை விலக்கு.
1640 இராப்பகல் கண்ணிலே.
இராப்பட்டினி கிடந்தவன் அகவிலை கேட்பானே?
இராப்பட்டினி கிடந்தவன் உரித்த வாழைப்பழம் விற்கிறதா என்று விசாரித்தானும்.
இராப்பட்டினி பாயோடே.
இராம பாணம் பட்டு உருவினாற் போல.
இராமர் இருந்த இடம் அயோத்தி.
இராம லட்சுமணரைப்போல இசைந்திருக்கிறது.
இராம வாக்குக்கு இரண்டுண்டோ?
இராமனைப்போல ராசா இருந்தால், அனுமானைப்போல சேவகனும் இருப்பான்.
இராமன் ஆண்டாலென்ன? இராவணன் ஆண்டால் என்ன?
1650 இராமன் மங்கையோடு இணங்கியது அவம்.
இராமாமிர்தமே சீவனமென்று பட்டினியாய் இருக்கலாமா?
இராமுழுதும் ராமாயணம் கேட்டு சீதைக்கு-ராமன் என்ன வேண்டும் என்ற கதை.
இராமேசுரத்துக்கும் காசிக்கும் போயும் என்னைப் பிடித்த சனீசுவரன் தொலையவில்லை.
இராயர் ஏறின குதிரைக்கு மேடேது பள்ளமேது?
இராவண சந்நியாசி போலிருக்கிறான்.
இராவணன் குடிக்கு மகோதரன் போலும், சுயோதனன் குடிக்குச் சகுனிபோலும்.
இராவுத்தனே சினந்திருக்கும்போது குதிரை கோதுமை ரொட்டிக்கழுததாம்.

இராவுத்தனைத் தள்ளினதும் அல்லாமல் குழியும் பறித்ததாம் குதிரை.
இரு குடம் கொண்டு அரைப்பாம்பாட்டுவதென்ன, எந்திழையே?
1660 இருக்க இருக்க எல்லாம் இசைவாகும்.
இருக்கச் சாணிடமில்லாமற் போனாலும், பெருக்கப் பெருக்கப் பேசுவதில் மாத்திரம் குறைவில்லை.
இருக்கவேண்டுமென்றால் இரும்பைத் தின்னு.
இருக்கிற அன்றைக்கு எருமை மாடு தின்றாற்போல.
இருக்கிறவனுக்கு ஒரு வீடு, இல்லாதவனுக்கு அநேக வீடு.
இருக்கிறவன் செவ்வையாய் இருந்தால், சிரைக்கிறவன் செவ்வையாய்ச் சிரைப்பான்.
இருக்கிறவன் நல்லவனானால், இடைப்பந்தியிலிருந்தாலென்ன, கடைப்பந்தியிலிருந்தாலென்ன?
இருக்கும் இடம் எவுமா?
இருசுழி இருந்து உண்டாலும் உண்ணும், இரந்து உண்டாலும் உண்ணும்.
இருடி உடைமை இராத்தங்காதது போல.
1670 இருடி கர்ப்பம் இராத்தங்காது.
இருடிக்குப் புருடனைச உண்டா?
இருடி மூலம் நதி மூலம் விசாரிக்கப் போகாது.
இருட்டுக்கு எல்லாம் சரி.
இருட்டுக் குடிவாழ்க்கை திருட்டுக்கு அடையாளம்.
இருட்டு வீட்டிலே குருட்டுக் காக்காய் ஓட்டுகிறது.
இருட்டு வீட்டுக்குள் போனாலும் திருட்டுக் கை போகாது.
இருட்டு வேலையோ குருட்டு வேலையோ?
இருதயத்தில் நினைந்ததெல்லாம் எழுதிக்கட்டு.
இருதலைக்கொள்ளி எறும்பு போல் ஆனேன்.
1680 இருதலை மணியன் பாம்பைப்போல.
இரு நாய்க்கிட்ட எலும்பு போல.
இருந்த கால் மூதேவி, நடந்த கால் சீதேவி.
இருந்த நாள் எல்லாம் இருந்துவிட்டு ஊர்ப்பறையனுக்குத் தாரை வார்த்ததுபோல.
இருந்தல்லவோ படுக்கவேண்டும்.
இருந்தவனுக்குப் போனவன் குணம்.
இருந்தவன் இருப்பவனுக்கு வழிகாட்டி.
இருந்தவன் எழுந்திருக்கிறதற்குள்ளே நின்றவன் நெடுந்தூரம்.
இருந்தவன் தலை மேலே இடி விழுந்ததுபோல.

இருந்தால் இருப்பீர், எழுந்தால் நிற்பீர்.
1690 இருந்தால் பூனை, பாய்ந்தால் புலி.

இருந்து பணங்கொடுத்து, நடந்து வாங்கவேண்டியதாய் இருக்கிறது.

ந்தும் கெடுத்தான், பாவி, செத்தும் கெடுத்தான்.

பத்தொரு மழையும் எண்ணி ஊற்றியது.

ப்பிடம் தலைப்பிள்ளை, தலைக்கடை தென்னம் பிள்ளை.

ருப்பிடம் வைகுண்டம்.

இருப்புக்கட்டியை காற்றடிக்கிறபோது, இலவம்பஞ்சு எனக்கு என்ன புத்தி என்கிறதாம்.

இருப்புக்கதவு இடித்துத் தவிட்டுக்கொழுக்கட்டை எடுக்கிறதா?

இருப்புக்கோட்டையும் கற்கதவும் போலே.

இருப்புச்சலாகையை விழுங்கிப்போட்டு இஞ்சிச் சாறு குடித்தால் தீருமா?

1700 இருமனது மங்கையோடு இணங்குவது அவலம்.

இரும்பு அடிக்கிற இடத்தில் ஈய்க்கு என்ன அலுவல்?

இரும்பு அடிக்கிற இடத்தில் நாய்க்கு என்ன வேலை?

இரும்பு கோணினால் யானையை வெல்லலாம், கரும்பு கோணினால் கட்டியும் பாகுமாம், அரும்பு கோணினால் அதன் மணங்குன்றுமோ, நரம்பு கோணினால் நாமதற்கு என் செய்வோம்?

இரும்பு செம்பானால் திரும்பிப் பொன் ஆகும்.

இரும்பு செம்பானால் துரும்பு தூணாகும்.

இரும்புத் துறட்டுக்கு அசையாத் புளியங்காய் திருப்பாட்டுக்கு அசையுமா?

இரும்புத்தூணை எறும்பு அரித்தாற்போல.

இரும்புத்தூணைச் செல் அரிக்குமா?

இரும்பு பிடித்த கையும் சிரங்கு பிடித்த கையும் சும்மா இராது.

1710 இரும்பை எலி தின்றது என்கிறான் இடக்கன்.

இரும்பை எலி தின்னுமா?

இரும்பை எறும்பு அரிக்குமா?

இரும்பைக் கரையான் அரித்தால், பிள்ளையைப் பருந்து கொண்டு போகாதா?

இருவராலே ஆகாத காரியம் ஒருவராலே ஆகுமா?

இருவரும் ஒத்தால் ஒருவருக்கும் பயமில்லை.

இருவரும் ஒத்தால் பிணக்கு வருவானேன்?

இருவர் நட்புக்கு ஒருவர் பொறுமை.

இருவிரல்தோலும் அதின்மேல் மயிரும் எனக்கில்லையே!
இருளன் பிள்ளைக்கு எலிக்குஞ்சு பஞ்சமா (கருப்பா)?
1720 இருளன் ராசவிழி விழிப்பானா?
இருளும் ஒருகாலம் நிலவும் ஒருகாலம்.
இரெட்டியாரே இரெட்டியாரே என்றால், கலப்பையைத் திட்டென்று போட்ட கதை.
இரை விழுங்கின பாம்புபோல.
இலக்கணப் பெண்சாதி மானியங் காக்கிறாள்.
இலக்கணம் கற்றவன் கலக்கம் அற மன்னர்சபை காண்பான்.
இலங்கணம் பரம ஔடதம்.
இலங்கையில் பிறந்தவன் எல்லாம் இராவணன் ஆவதில்லை.
இலங்கையைச் சுட்ட குரங்கு.
இலட்சணம் அவலட்சணம் முகத்திலே.
1730 இலந்தைப்பழம் புழுப்போல் துடிக்கிறது.
இலவுகாத்த கிளி ஆனேன் (கிள்ளைபோல).
இலுப்பை சர்க்கரை கொடையாம், துரைகள் மெச்சின நடையாம்.
இலுப்பைப் பூவைத் திருப்பினால், இரண்டுபுறமும் பொத்தல்.
இலை தின்னி காய் அறியான்.
இலைப் பழுப்பு ஆனாலும் குலப்பழுப்பு ஆகாது.
இலைமறைவு தலை (காய்) மறைவு வேண்டாமா?
இலையும் பழுப்பும் எங்கும் உண்டு.
இலௌகிகம் வைதிகம் இரண்டும் வேண்டும்.
இல்லது வாராது உள்ளது போகாது.
1740 இல்லறம் பெரிது துறவறம் சிறிது (பழிப்பு)
இல்லாத பிள்ளைக்கு இலுப்பைப் பூ சர்க்கரை.
இல்லாதவன் பெண்சாதி எல்லாருக்கும் தோழியா?
இல்லாதவன் பொல்லாதவன்.
இல்லாத வீட்டுக்கு இலஞ்சியம்.
இல்லாது சொல்லி அல்லற் படுதல்.
இல்லாது பிறவாது அள்ளாது குறையாது.
இல்லாதும் இல்லன் இருப்பதும் இல்லன்.
இல்லாளை வீட்டு வல்லாண்மை பேசுகிறதா?
இல்லிடமில்லார்க்கு நல்லிடமில்லை.
1750 இல்லை என்கிற வீட்டில் பல்லியும் சேராது.
இல்லையா இலைமறைவு காய்மறைவு?
இல்லோர் இரப்பது இயல்பு.

இவருக்குச் சொல்லும் புத்தி கடலிற் பெருங்காயம் கரைத் தாற்போல் இருக்கிறது.
இவள் விலைமோரில் வெண்ணெய் எடுத்துத் தலைமகனுக்குக் கலியாணம் பண்ணுவாள்.
இவனுக்கும் அவளுக்கும் ஏழாம் பொருத்தம்.
இவன் ஊராருக்குப் (ஊருக்குப்) பிள்ளை.
இவன் கல்லாது கற்றவன், உள்ளங்கையில் வைகுண்டம் காட்டுவான்.
இவன் புத்தி உலக்கைக் கொழுந்து (குந்தாணி வேர்.)
இவன் மகா பெரிய கள்ளன், காலால் முடிந்ததைக் கையால் அவிழ்க்கிறது அரிது..
1760 இவன் வாழ்ந்த வாழ்வு மருகிலேன் மல்லாக்கிலேன்?

இவன் வீட்டிலாவது சாப்பாடாவது, இவன் பரம்பரை யாய்ப் பிச்சைக்காரனுச்சே.
இவ்வூர்ப் பூனையும் புலால் தின்றது.
இழவு கொடுப்பானுக்கு வாழ்க்கைப்பட்டு ஓட்டமேயொழிய நடையில்லை.
இழவுக்கு வந்தவள் தாலி அறுப்பாளா?
இழவு சொன்னவன் பேரிலேயா பழி?
இழுக்கான பொன்னைப் புடத்தில் வைத்தெடுப்பார்கள்.
இழுக்குடைய பாட்டிற்கு இசை நன்று.
இழுவை கண்டால் அடி பார்ப்பானேன்?
இழை ஆயிரம் பொன்பெற்ற இந்திர வர்ணப்பட்டு.
1770 இழையத் தீட்டிக் குழைய வடித்தல்.

இளகின இரும்பைக் கண்டால் கொல்லன் குண்டியைத் தூக்கி அடிப்பான்.
இளங்கன்று பயம் அறியாது.
இளமையில் முயற்சி முதுமையிற் காக்கும்.
இளமையிற் கல்வி எப்போதும் நிற்கும்.
இளமையில் கல்வி சிலைமேல் எழுத்து.
இளமையிற் சோம்பல் முதுமையில் மிடிமை.
இளமையிற் பழக்கம் எப்போதும் மறவாது.
இளமையும் முதுமையும் சரியான வயதல்ல.
இளவெந்நீர் குளிக்காதவளா உடன்கட்டை ஏறப்போகிறாள்?
1780 இளவெயில் காயாத நீயா தீ பாயப்போகிறாய்?

இளித்துக்கொண்டிருந்தாளாம் மடத்தாயி, ஏறியடித்தானும் தவசிப்பிள்ளை!
இளைஞன் ஆனாலும் ஆடுவான் மூப்பு.
இளைத்தவர் கிளைப்பார், கிளைத்தவர் இளைப்பார்.

இளைத்தவள் தலையில் ஈரும் பேனும்.
இளைத்தவன் எள்ளை விதை.
இளைத்தவன் சிநேகிதனைச் சேர்.
இளைத்தவன் தலையில் சொட்டு.
இளைத்தவன் பெண்டாட்டி எல்லாருக்கும் மைத்துனி.
இளையாளே வாடி, மலையாளம் போவோம்; மூத்தாளே வாடி, முட்டிக்கொண்டு சாவோம்.
1790 இளையாள் இலை தின்னி; மூத்தாள் காய் அறிவாள்.

இறகு முற்றிப் பறவை ஆனால், எல்லாம் தன் வயிற்றைத் தான் பார்க்கும்.
இறக்குங்காலம் வராமல் பிறக்குமா ஈசலுக்குச் சிறகு?
இறங்கச்சே நீச்சானால் கரை யேறுகிறதெப்படி?
இறங்குபொழுதிலே மருந்து குடி.
இறங்கும் துறையிலே நீத்தானால் இந்த ஆற்றை எப்படிக் கடக்கிறது?
இறந்தவனுக்கு எள்ளும் தண்ணீரும்.
இறந்தவன் இருப்பவனுக்கு வழிகாட்டி.
இறந்தவன் பிள்ளை இருந்தவன் அடைக்கலம்.
இறந்திறந்து பிறந்தாலும் இருவக் கரையானாய்ப் பிறக்க வேண்டும்.
1800 இறுக் கறியோ புறுக்கறியோ?

இறுகினால் களி, இளகினால் கூழ்.
இறுத்த குடிக்கு அனர்த்தம் இல்லை.
இறுப்பானுக்குப் பணமும் கிடையாது, உழைப்பானுக்குப் பெண்ணும் கிடையாது.
இறைக்க இறைக்கக் கிணறு சுரக்
இறைக்க ஊறும் மணற்கேணி, ஈயப்பெருகும் பெரும் செல்வம்.
இறைச்சி தின்கிறவன் கடுப்புக்கு மருந்து அறிவான்.
இறைச்சி தின்றாலும் எலும்பைக் கோத்துக் கழுத்திலணிகிறதா?
இறைத்த கிணறு ஊறுமா, இறையாத கிணறு ஊறுமா?
இறைத்த கிணறு ஊறும், இறையாத கிணறு நாறும்.
1810 இறைத்தகிணறு சுரக்கும்.

இற்றேம் இளைத்தோமென் றிரக்கப்போனாலும், என் சனி என்னை விடவில்லை.
இனத்தை இனம் தழுவும்.
இனம் இனத்தைக் காக்கும், வேலி பயிரைக் காக்கும்.
இனம் இனத்தோடே வெள்ளாடு தன்னோடே.

இனம் பிரிந்த மான்போல.
இனிமேல் எமலோக பரியந்தம் சாதிக்கலாம்.
இனிமேல் ஒரு தெய்வத்தைக் கையெடுக்கிறதா ?
இன்பத்தில் ஆசை எவர்க்கும் உண்டு.
இன்பமும் துன்பமும் எடுத்த உடலுக்கு இயல்பு.
1820 இன்பமும் துன்பமும் பொறுமையிலே.
இன்பம் வருவதும் துன்பம் வருவதும் எடுத்த உடலிற்கு வரம்.
இன்றற்று இன்று போகிறதா ?
இன்று இருப்பார் நாளைக்கு இல்லை.
இன்றைக்கு ஆகிறது நாளைக்கு ஆகட்டும்.
இன்றைக்கு இலை அறுத்தவன் நாளைக்குக் குலை அறுக்க மாட்டானா ?
இன்றைக்கு என்பதும் நாளைக்கு என்பதும் இல்லை என்பதற்கு அடையாளம்.
இன்றைக்குச் சின்னதுக்கு வந்தது நாளைக்குப் பெரியதுக்கு வரும்.
இன்றைக்குச் செத்தால் நாளைக்கு இரண்டு நாள்.
இன்னம் இருக்கிறது தேருக்குள் சிங்காரம்.
1830 இன்னும் இருக்கிறது நேருக்குள் சிங்காரம்.
இன்னும் கிடக்குது ரீயோ ரீயோ.

ஈ என்று போயிருக்கிறாள்.
ஈ கலையாமல் தேன் எடுப்பார்கள், எடுக்காமற் பிடிப்பார்கள்.
ஈகை உடையோன் எக்களிப்பு அடைவான்.
ஈக்கும் பாலுக்கும் எச்சில் இல்லை.
ஈக்கு விடம் தலையில், தேளுக்கு விடம் கொடுக்கில்.
ஈசனுக்கு ஒப்பு எங்கணும் (இஙகொன்று) மில்லை.
ஈசனுடைய அடியார் மனம் எரிந்து புகைந்தால் வீண் போகுமா ?
ஈசன் எப்படி, அப்படி தாசன்.
1840 ஈசுவரன் கோவில் திருநாள் ஒருநாள் கந்தாயம்.
ஈசலுக்கு எல்லாம் பகை.
ஈசல் இறகு எல்லாவற்றிலும் மிருது.
ஈசல் பறந்தால் மழை.
ஈசல் புற்றில் கரடி வாய்வைத்தாற் போல்.
ஈசல் பெரும்போக்கில் தவளை தத்திவிழுந்ததுபோல்.
ஈசல் பொறுக்கி பேசவும் அறியான்.
ஈசல் மடிந்தாற்போல் மடிந்ததே சேனை.
ஈச்சங்கள்ளு எதிலும் குளிர்ச்சி.

ஈச்சங் காட்டில் எருமை குடியிருந்த கதை.
1850 ஈச்ச முள்கொண்டு இறுக இறுகத் தைத்தாலும், தேற்றிய வசனம் சொல்லாமல் விடான்.
ஈச்ச முள்ளாலே இருவாயும் தைத்தாலும், தேங்காய்க்கு மஞ்சளில்லை பூவுக்கு மணமில்லை என்கிறாள்.
ஈடன் பாடஞ்சான், கூழை யெருது நுளம்புக் கஞ்சாது.
ஈடாகாதவனை எதிர்க்காதே.
ஈடு சோடு எங்கும் கிடையாது.
ஈடுள்ள குடிக்குக் கேடில்லை.
ஈட்டி எட்டினமட்டும் குத்தும், பணம் பதின்காதமட்டும் குத்தும்.
ஈட்டி எட்டுமுழம் பாயும், பணம் பாதாளம் வரைக்கும் பாயும்.
ஈட்டிய பொருளினும் எழுத்தே உடைமை.
ஈட்டுக்கு ஈடும் சோட்டுக்குச் சோடுமாய் இருந்தால் வாசி.
1860 ஈட்டுக்கும் பாட்டுக்கும் இருந்தாள் இடு (எடு) குமரி,
ஈதல் உடையோரை யாவரும் புகழ்வார்.
ஈந்து பார்த்தால் இம்மி வெளியாகும்.
ஈப்பிசினி இரப்பது கூடக் கக்கிசம்.
ஈயத்தைக் காய்ச்சலாம், இரும்பைக் காய்ச்சலாமா ?
ஈயம் பிடித்தவன் எது சொல்லினும் கேளான்.
ஈயாத புல்லர் இருந்தென்ன போயென்ன ?
ஈயாத புல்லனை எவ்விடத்தும் காணேம்.
ஈயாதார் வாழ்ந்தென்ன, இண்டஞ்செடி தழைத்தென்ன ?
ஈயாப்பத்தன் பேராசைக்கொண்டு பெருக்கத் தவிக்கிறான்.
1870 ஈயார் பொருளுக்குத் தீயார்.
ஈயும் எறும்பும் எங்கும் உண்டு.
ஈயைப் பிடித்தால் கைவேறு கால்வேறு.
ஈயைப்போல சுத்தமும், எறும்பைப்போல பலமும்.
ஈரங் காய்ந்தால் பிட்டத்தில் மண் ஒட்டாது.
ஈரச் சீலையைப்போட்டுக் கழுத்து அறுப்பான்.
ஈர நாவிற்கு எலும்பில்லை.
ஈரமில்லா நெஞ்சத்தார்க்கு என்செய்து மென்ன ?
ஈரம் அற்ற இடத்திலே ஈ மொய்க்குமா, ஈரம் உள்ள இடத்திலே ஈ மொய்க்குமா ?
ஈர வெங்காயத்திற்கு இருபத்துநாலு புரை எடுக்கிறது.
1880 ஈரை நினைப்பான் பேரை மறக்கான்.
ஈரைப் பேனாக்கிப் பேனைப் பெருமாள் ஆக்குகிறான்.
ஈர் உருவப் பேன் அகப்படுமா ?

ஈர்க்கிலே குத்தி இறப்பிலே வைத்தாற்போல.
ஈ வதையைக் கண்டால் யாவரும் அண்டார்.
ஈ விட்டித்ததும் நாய் திருடித் தின்றதும்.
ஈ விழுந்த சாதம் எடுத்தா லொழியப் போகுமா?
ஈவோனுக்கு ஒரு போசனம், இரப்போனுக்கு ஏராளம்.
ஈழத்திற் செக்காட இங்கே பதம் பார்க்க.
ஈனருக்கு இடங்கொடுத்தால் இல்லிடமெல்லாம் பாழ்.
1890 ஈனரை அடுத்தால் மானம் அழியும்.
ஈனவும் தெரியாது நக்கவும் தெரியாது.
ஈனனுக்கு இடம் கொடுத்தால் இல்லிடம் கைகொள்வான்.
ஈன்றவள் தாய் பாட்டி, இவள் தாயின் தாய் பூட்டி (பீட்டி.)
ஈன்றோர் நஞ்சிற் சான்றோர் இல்லை.

உகமுடிய மழைபெய்தாலும் ஓட்டாங்கிளிஞ்சில் பயிராகுமா?
உகிர்சுற்றின்மேல் அம்மி விழுந்ததுபோல்.
உங்களப்பன் செத்தான் பழி உன்னை விடேன்.
உங்களப்பன் பூச்சிக்குப் பயப்பட்டேனா, உன் பூச்சிக்குப் பயப்பட?
உங்களைக் கடலிலே கைகழுவினேன்.
1900 உங்கள் உறவிலே வேகிறது ஒருகட்டு விறகிலே வேகும்.
உங்கள் உறவிலே வேகிறதைவிட ஒருகட்டு விறகிலே வேகிறதுமேல்.
உங்கள் பெண்டுகள் கொண்டல் அடித்தால் கண்கள் கொள்ளாது.
உங்கள் வீட்டுப் பனங்கட்டை ஒற்றைப் பணத்தை முடிந்து கொண்டு கிடைக்குமோ?
உசு பிடியென்றால் நீ பிடி யென்கிறதாம் நாய்.
உச்சந்தலையிலே செருப்பா லடித்ததுபோல.
உச்சந்தலையிற் செருப்பா லடித்தாலும் உச்சி குளிருமா?
உடம்பிலே பயமிருந்தால் நன்றாய்ச் செய்வான்.
உடம்பு எங்கும் சுடுகிற தழலை மடியிலே கட்டுகிறாய்.
உடம்பு எடுத்தவன் எல்லாம் ஓடு எடுத்தான்.
1910 உடம்பு எல்லாம் புழுத்தவன் அம்மன் கோவிலைக் கெடுத்த

உடம்பு தேற்றிக்கொண்டு அல்லவா யோகத்தில் போக வேண்டும்?
உடம்பு முழுதும் நனைந்தவருக்குக் கூதல் என்ன?
ம்புளைந்த கழுதை உப்புக்களத்திற்குப் போனதுபோல்.
ம்போடே ஒரு நாட்டியம் உண்டா?

உடலுக்குள்ளே நாக்கை வளைக்கிறதா ?
உடலுக்கோ பால் வார்த்து உண்பது, ஊருக்கோ பால் வார்த்து உண்பது ?
உடலும் நிழலும் போல.
உடல் இரண்டு உயிர் ஒன்று.
உடல் உள்ளவரைக்கும் கடல் கொள்ளாத கவலை.
1920 உடல் உள்ளவனுக்குக் கடல் கொள்ளாத கவலை.

உடல் ஒருவனுக்குப் பிறந்தது, நாவு பலருக்குப் பிறந்தது.
உடல் மெச்சப் பால் குடிக்கிறாயா, ஊர் மெச்சப் பால் குடிக்கிறாயா ?
உடாப் புடைவை பூச்சிக்கு இரை.
உடுக்காத புடைவையைச் செல்லு அரிக்கும்.
உடுக்கைக் கிடைசிறுத்தால் ஓசையுண்டு, உரலுக்கிடை சிறுத்து உதவி என்ன ?
உடுத்த சீலை (புடைவை) பாம்பாய்க் கடித்ததுபோல.
உடுத்துக் கெட்டான் துலுக்கன், தின்று கெட்டான் மாத்துவன்.
உடுத்துக் கெட்டான் வெள்ளைக்காரன், உண்டு கெட்டான் சோனகன், புதைத்துக்கெட்டான் தமிழன்.
உடும்புக்கு இரண்டு நாக்கு உனக்கும் இரண்டு நாக்கா ?
1930 உடும்புக்கு இரண்டு நாக்கு மனிதனுக்கு ஒரு நாக்கு.

உடும்புடும்பே இண்டிக்குப் போ.
உடும்பு போனால் போகிறது, கைவந்தால் போதும்.
உடும்பு வேண்டாம் கையை விடு.
உடைந்த சங்கில் ஊதை (காற்று) பறியுமா ?
உடைந்த சங்கு ஊத்துப் பறியுமா ?
உடைமுள்ளுக்கு எதிரே உதைக்கலாமா ?
உடைமைக்காரனுடன் உண்டா ஓர் நாட்டியம் ?
உடைமையும் கொடுத்து அருமையும் குலைகிறது.
உடைமை யென்பது கல்வி யுடைமை.
1940 உடையவனிற் கைப்பற்றினவன் மிடுக்கன்.

உடையவன் இல்லாச் சேலை ஒரு முழம் கட்டை.
உடையவன் கண்ணோடாப் பயிர் உடனே அழியும்.
உடையவன் காலடியே உயர்ந்த உரம்.
உடையவன் சொற்படி உரலைச்சுற்றிக் குழிபறி.
உடையவன் சொற்படி கமுகடி களைபறி.
உடையவன் பாராப் பயிர் உருப்படுமா ?
உடையவன் பொறுத்தாலும் உடையவன் வீட்டுநாய் பொறுக்காது.

உடையார் வீட்டு மோருக்கு அகப்பைக் கணக்கு என்ன?
உட்கார்ந்தல்லவோ படுக்கவேண்டும்?
1950 உட்கார்ந்திருக்கச்சே அடித்தால் பொன்னாகும், ஓடச்சே அடித்தால் செம்பானாலும்ஆகும் இரும்பானாலும் ஆகும்.
உட்சுவர் இருக்கப் புறச்சுவர் பூசலாமா?
உட்சுவர் தீற்றிப் புறச்சுவர் தீற்று.
உட்புறத்துக்கு வெளிப்புறம் கண்ணாடி.
உணர்வில்லாக் கருவியும் உப்பில்லாச் சோறும் சரி.
உண்கிற சோறு வெல்லம்.
உண்கிற சோற்றிலே கல்லைப் போடுகிறதா?
உண்கிற சோற்றிலே நஞ்சைக் கலக்கிறதா?
உண்கிற வயிற்றை ஒளிக்கிறதா?
உண்ட உடம்பிற்கு உறுதி, உழுத புலத்தில் நெல்லு.
1960 உண்ட உடம்பு உருகும், தின்ற பாக்குச் சிவக்கும்.
உண்ட களை (இளைப்பு) தொண்டருக்கும் உண்டு.
உண்ட சுற்றம் உருகும்.
உண்ட சோற்றுக்கு இரண்டகம் பண்ணுகிறதா?
உண்டது தானே ஏப்பம் வரும்?
உண்டதும் தின்றதும் லாபம், பணியில் கிடந்தது லோபம்.
உண்ட பிள்ளை உரஞ்செய்யும்.
உண்டவயிறு கேட்கும், தின்ற பாக்குச் சிவக்கும்.
உண்ட வயிற்றுக்கு உபசாரமா?
உண்ட வயிற்றுக்குச் சோறும், மொட்டைத்தலைக்கு எண்ணெயும் போல.
1970 உண்டவள் உண்டுபோக என் தலை புண்டு போகிறதா?
உண்டவன் உரஞ்செய்வான்.
உண்ட வீட்டிலே உட்காராதே போனால், கண்டவர்கள் எல்லாம் கடுகடு என்பார்கள்.
உண்ட வீட்டுக்கு இரண்டகம் பண்ணலாமா?
உண்ட வீட்டுக்கு இரண்டு நினைக்கிறவன் உண்டா?
உண்டார் மேனி கண்டால் தெரியும்.
உண்டாலும் உறுதிப்பட உண்ணவேண்டும்.
உண்டால் கொல்லுமோ, கண்டால் கொல்லுமோ?
உண்டால் தின்றால் உறவு, கொண்டால் கொடுத்தால் உறவு.
உண்டால் தின்றால் ஊரிலே காரியமென்ன?
1980 உண்டால் தீருமா பசி, கண்டால் தீருமா பசி?
உண்டாற் கொல்லும் விடம்.
உண்டு உறியில் இரு என்றால், உருண்டு தரையில் (தெருவில்) விழுகிறாய்.

உண்டு கொழுத்தால் நண்டு வளையில் இருக்குமா?
உண்டு தின்று உயரம் ஆனால் ஊரிலே காரியம் என்ன?
உண்டு தின்று உள்ளே இருவென்றால் உயர எழும்பி என்

உண்டு ருசி கண்டவனும் பெண்டு ருசி கண்டவனும் விடான்.
உண்டை பட்டு உறங்குகிற குருவிபோல.
உண்ணக் கைசலித்து இருக்கிறான்.
உண்ணப் படையுண்டு வெல்லப் படையில்லை.
1990 உண்ணவா என்றால் குத்த வருகிறான்.

உண்ணாக்கை அறுத்துச் சுண்ணாம்புக் குறியிடுவேன்.
உண்ணாச் சொத்து மண்ணாய்ப் போகும்.
உண்ணாமல் ஊரெல்லாம் திரியலாம், உடுக்காமல் ஒரு வீட்டுக்கும் போகலாகாது.
உண்ணாமல் ஒன்பது வீடு போகலாம், உடுக்காமல் ஒரு வீடும் போகல் ஆகாது.
உண்ணாமல் தின்னாமல் உறமுறையாருக் கீயாமல்.
உண்ணாமல் தின்னாமல் ஊர் அம்பலமானேனே.
உண்ணாமல் தின்னாமல் வயிறு உப்புசங் கொண்டேன்.

உண்பது இருக்க ஒரு கருமம் செய்யேல்.
2000 உண்பது நாழி, உடுப்பது நான்குமுழம், எண்பது கோடி
யம் மனம்!

உண்பாரைப் பார்த்தாலும் உழுவாரைப் பார்க்கல் ஆகாது.
உண்பான் தின்பான் சிவப்பிராமணன், குத்துக்கு நிற்பான் வீரமுட்டி.
உண்பான் தின்பான் சேப்பெருமாள், குத்துக்கு நிற்பான் வைராகி.
உண்பான் தின்பான் நயனப்பசெட்டி, உடன்கட்டை ஏறுவான் பெருமாள் செட்டி.
உண்மை சொல்லிக் கெட்டாரும், பொய் சொல்லி வாழ்ந்தாரும் இல்லை.
உண்மை சொன்னால் உண்மை பலிக்கும், நன்மை சொன்னால் நன்மை பலிக்கும்.
உண்மை நன்மொழி திண்மை உறுத்தும்.
உண்மைப்படு உறுதிப்படு.
உதடு பழஞ்சொரிய உள்ளே நெஞ்சு (வயிறு) எரிய.
2010 உதடு மன்றாடப்போய் உள்ளிருந்த பல்லும் போனாற்போல.

உதட்டிலே உறவும், உள்ளே (நெஞ்சிலே) பகையும்.
உதட்டிலே புண் ஆனால், பால் கறக்காதா?

உதட்டிலே வாழைப்பழம், உள்ளே தள்ளவேண்டுமோ?
உதட்டுக்கு மிஞ்சின பல்லும், திருட்டுக்கு மிஞ்சின கையும்
உதட்டுத்துரும்பு ஊதப்போகாது.
உதர நிமித்தம் வெகு கிர்தவேடம்.
உதவாத செட்டிக்குச் சீட்டு எழுதினதுபோல.
உதவாப் பழங்கலமே, ஓசையில்லா வெண்கலமே!
உதவி செய்வார்க்கு இடையூறு ஏது?
2020 உதறுகாலி முண்டை உதறிப்போட்டாள்.
உதறுகாலி வந்தாள், உள்ளதும் கெடுத்தாள்.
உதாரிக்குப் பொன் துரும்பு.
உதிக்கின்ற கதிரோன் முன்னே ஒளிக்கும் மின்மினியைப் போல்.
உதிரத்துக்கு அல்லவோ உருக்கம் இருக்கும்?
உதைத்த கால் புழுக்கிறதற்கு முன்னே அடிவயிறு சீழ் கட்டு
உதைத்த கால் புழுக்கிறபோது அல்லவோ புழுக்கும்?
உதைப்பானுக்கு வெளுப்பான் சாதி வண்ணான்.
உத்தம சேவகன் பெற்ற தாய்க்கு அதிகம்.
உத்தமனுக்கு எத்தாலும் கேடு இல்லை.
2030 உத்தமனுக்கும் தப்பிலிக்கும் (போக்கிரிக்கும்) உடன் படிக்கை வேண்டாம்.
உத்தமனுக்கும் தப்பிலிக்கும் ஓலை என்னத்திற்கு.
உத்தராயணம் என்று உறியைக் கட்டிக்கொண்டு சாகிறதா?
உத்தியோகத்துக்குத் தக்க சுகம்.
உத்தியோகம் குதிரைக் கொம்பாயிருக்கிறது.
உத்தியோகம் தடபுடல், சேவிக்கிறவர்கள் இன்னாரினியாரென்றில்லை, சம்பளம் கணக்கு வழக்கில்லை, குண்டையை விற்று நாலு வராகன் அனுப்பச்சொல்லு.
உத்தியோகம் புருடலட்சணம்
உத்திராடத்தில் ஒரு பிள்ளையும், ஊர்வாரியில் ஒரு நிலமும்.
உபகாரத்திற்கு அபகாரம் வருவது துரதிருஷ்டம்.
உபசரியாத வீட்டிலே உண்ணாதிருப்பதே கோடி தனம்.
2040 உபசாரம் செய்தவர்க்கு அபசாரம் பண்ணுகிறதா?
உபசார வார்த்தை காசாகுமா, உண்டாலொழியப் பசிதீருமா?
உபசார வார்த்தை வாய்க்குக் கேடு, தூற்றுப் பருக்கை வயிற்றுக்குக் கேடு.
உபநயனம் இல்லாமல் கலியாணம் பண்ணினனும்.
உபாயத்தால் ஆகிறது பராக்கிரமத்தால் ஆகுமா?

உப்பளத்து மண்ணும், உழுமண்ணும், செம்மண்ணும், காவேரி மண்ணும் கலந்து வழங்குகிறது.
உப்பிட்டவரை உள்ளளவும் நினை.
உப்பு இருந்த பாண்டமும், உபாயம் இருந்த நெஞ்சமும் தப்பாமல் தட்டுண்டு உடையும் (தட்டி உடையாமல் தானே உடையும்).
உப்பு இருந்தால் பருப்பு இராது, பருப்பு இருந்தால் உப்பு இராது.
உப்பு இல்லாப் பண்டம் குப்பையிலே.
2050 உப்பு இல்லாமல் ஒரு மிடா (கல)க்கஞ்சி குடிப்பான்.

உப்பு இல்லாவிட்டால் தெரியும் உப்பின் அருமை, அப்பன் இல்லாவிட்டால் தெரியும் அப்பன் அருமை.
உப்பு எடுத்த கையாலே கர்ப்பூரமும் எடுக்கவேண்டும்.
உப்பு கட்டினால் உலகம் கட்டும்.
உப்புக்கண்டம் பறிகொடுத்த பார்ப்பாத்திபோல விழிக்கிறாய்.
உப்புச் சட்டியும் வறையோடும் தோற்றுவிட்டான்.
உப்புச் சட்டியும் வறையோடும் விற்றுக் கடனைக்கொடுத்து விட்டான்.
உப்புத் தண்ணீருக்கு இலாமிச்சம்வேர் போடவேண்டுமா?
உப்புத் தண்ணீரும் கப்புமஞ்சளும் ஊறிப் போச்சுது.
உப்புத் தின்றவன் தண்ணீர் குடிப்பான்.
2060 உப்புநீர் மேகம் சேர்ந்தால் உலகிற் பிரவாகம்.

உப்பு மிஞ்சினால் உப்புச்சாறு, புளி மிஞ்சினால் புளிச்சாறு.
உப்பு மிஞ்சினால் தண்ணீர் போடு, தண்ணீர் மிஞ்சினால் உப்புப் போடு.
உப்புமுதல் கர்ப்பூரம் வரைக்கும் வேண்டும்.
உப்பும் கர்ப்பூரமும் ஒன்றாய் வழங்குமா?
உப்பும் சோறும் உணர்த்தியாய் உண்ணவிலையோ?
உப்பு வாணிகன் அறிவானா கர்ப்பூர விலை.
உப்பைச் சிந்தினையோ, துப்பைச் சிந்தினையோ?
உப்பைத்தொட்டு உப்பைத் தின்னாதே.
உப்பைத் தொட்டுக்கொண்டு உரலை விழுங்குகிறதுபோல.
2070 உப்போடு ஒன்பதும் பருப்போடு பத்தும்வேண்டும்.

உப்போடே முப்பத்திரண்டும் வேண்டும்.
உமக்கு என்ன, வயதுக்கு நரைத்ததோ, மயிருக்கு நரைத்ததோ?
உமியும் கரியும் இருக்கிறது, உடைமை செய்யப் பொன் னில்லை.
உமியைக் குத்திக் கை சலித்தது போல.

உம் என்கிறாளாம் காமாட்சி, ஒட்டிக் கொண்டாளாம் மீனாட்சி.
உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்து (கருடன்) ஆகுமோ?
உயர்ந்த உடுப்பு, அயர்ந்த அடுப்பு.
உயிரிருக்க ஊனை வாங்குகிறது.
உயிரிருந்தால் உப்பு விற்றுப் பிழைக்கலாம்.
2080 உயிரும் உடலும் போல.

உயிருள்ள மட்டும் தைரியம் விடலாமா?
உயிரை வைத்திருக்கிறதிலும் செத்தாற் குணம்.
உயிரோடு இருக்கும்போது ஒரு கரண்டி நெய்க்கு வழியில்லை, ஓமத்துக்கு ஒன்பது கரண்டி நெய் விட்டது போல.
உயிரோடு ஒரு முத்தம் தராதவள், செத்தால் உடன்கட்டை ஏறுவாளா?
உயிரோடு திரும்பிப் பாராதவள், செத்தால் முத்தம் கொடுப்பாளா?
உயிர் உதவிக்கு மிஞ்சின உதவி வேறில்லை.
உயிர்த்தொழில் எல்லாம் பயிர்த்தொழில் தன்னால்.
உயிர் போகாமல் தண்ணீர் குடித்துக்கொண்டு வருகிறோம்.
உயிர் போம்போதும் தைரியம் விடலாகாது.
2090 உரஞ் செய்வது ஊரார் செய்யார்.

உரலிலே தலையை மாட்டிக்கொண்டு உலக்கைக்குப் பயப்பட்டால் தீருமா?
உரலிலே துணி கட்டியிருந்தாலும் உரிந்து பார்க்கவேண்டு

உரலில் அகப்பட்டது உலக்கைக்குத் தப்புமா?
உரலுக்கு ஒருபக்கம் இடி, மத்தளத்துக்கு இரண்டு பக்கமும்

உரலுக்குப் பஞ்சம் உண்டா
உரலுங் கொடுத்துக் குரலும் போக வேண்டும்.
உரல் பஞ்சம் அறியுமா?
உரல் மத்தளத்தோடு முறையிட்டாற் போல.
உரியை இரட்டித்தால் உழக்கு.
2100 உரு ஏறத் திரு ஏறும்.

உருக்கம் உருக்கமாய் ஊட்டி உள்ளே போச்சுது.
உருக்கம் உள்ள சிற்றாத்தே, ஒதுக்கில் வாடி கட்டி அழ.
உருக்கின நெய் வார்த்தாலும், கண்ட நியாயந்தான் சொல்லு

உருசிகண்ட பூனை உறியை யுறியைத் தாவுமாம்.
உருட்டப் புரட்ட உள்ளதும் உள்ளுக்கு வாங்கும்.
உருட்டும் புரட்டும் ஒடுக்கும் சிறப்பை.
உருட்டும் புரட்டும் மிரட்டும் சொல்லும்.
உருத்திராக்கப் பூனை உபதேசம் பண்ணினதுபோல.
உருத்திராக்கப் பூனை ஒன்றும் தெரியாதது போல் இருக்கும்.
2110 உருப்படத் திருப்படும்.
உருவத்தினலல்ல, இன்பப் பேச்சினல் கிளி நன்கு மதிக்கப் படும்.
உருவத்தை அல்ல குணத்தைப் பார், பணத்தை அல்ல சனத் தைப் பார்.
உருவிய வாளை உறையில் இடாத வீரன்.
உலகத்துக்கு ஞானம் பேய், ஞானத்துக்கு உலகம்பேய்.
உலகம் பலவிதம்.
உலகிலே கள்ளனுக்கு ஊரார் யாவரும் பகை.
உலகிலே பெண் என்றால் பேயும் இறங்கும்.
உலக்கை தேய்ந்து உளிப்பிடி ஆச்சுது.
உலக்கை பூசைக்கு அசையாதவள் திருப்பாட்டுக்கு அசை வாளா?
2120 உலக்கை பெருத்து உத்திரம் ஆயிற்று.
உலக்கையாலே காதுகுத்தி, உரலாலே தக்கை போட்டது போல.
உலுத்தன் விருந்திற்கு ஒப்பானது ஒன்று மில்லை.
உலைவாயை மூடினலும் ஊர்வாயை மூடலாமா?
உலைவாய் மெழுகு உருகுவது போல.
உலைவைத்த சந்திலே சாறு காய்ச்சுகிறது.
உலோபிக்கு இரட்டைச் செலவு.
உல்லாசநடை மேலுக்குக்குக் கேடு, மினுக்கு எண்ணெய் தலைக்குக் கேடு.
உழக்கிலே கிழக்கு மேற்கா?
உழக்கிலே வழக்கு.
2130 உழக்கு உள்ளூர்க்கு, பதக்கு பரதேசிக்கு.
உழக்கு உற்றார்க்கும் பதக்கு பரதேசிக்கு மானல், உழுத வனுக் கென்ன?
உழக்கு நெல்லுக்குழைக்கப் போய், பதக்கு நெல்லைப் பன்றி தின்றது போல.
உழக்கு மிளகு கொடுப்பான் ஏன், ஒளித்திருந்து மிளகுச் சாறு (நீர்) குடிப்பான் ஏன்?
உழக் குளிர் அடித்தால், நாற்றுப் பிடுங்கப் படாதா?
உழவிற்கு ஏற்ற கொழு.

உழவின் மிகுந்த ஊதியம் இல்லை.
உழவு ஒழிந்த மாடு பட்டிப் புறத்திலே.
உழவுக்கு ஒரு சுற்றும் வராது, ஊணுக்குப் பம்பரம் (முன்னே வரும்.)
உழவுக்குப் பிணைத்து விடுகிற மாடும், கூட்டுக்குப் பிடித்து விடுகிற ஆளும் உதவாது.
2140 உழவுந் தரிசும் ஓர் இடத்திலே, ஊமையும் செவிடனும் ஒரு மடத்திலே.
உழவு மாடு ஆனால் ஊரிலே விலைப்படாதா?
உழுகிற காலத்தில் ஊர்சுற்றிவிட்டு அறுக்கிற காலத்தில் அரிவாள் எடுத்துக்கொண்டு புறப்பட்டால்...
உழுகிற குண்டையானால் உள்ளூரில் விலையாகாதா?
உழுகிறதை விட்டு நழுவுகிறவன் தெய்வம் ஆடினாற்போல.
உழுகிற நாளில் ஊருக்குப்போய், அறுக்கிற நாளில் அரிவாள் கொண்டு வந்தாற்போல.
உழுகிற நாளில் ஊருக்குப்போனால், அறுக்கிறநாளில் ஆள் தேவையில்லை.
உழுகிற மாடு பரதேசம் போனால், அங்கு ஒருவன் கட்டி உழுவான்; இங்கு ஒருவன் கட்டி உழுவான்.
உழுகிற மாட்டை எருது நக்கினது போல.
உழுகிற மாட்டை நுகத்தால் அடித்தாற்போல.
2150 உழுகிறவன் இளப்பமானால் எருது மச்சினமுறை கொண்டாடும்.
உழுகிறவன் கணக்குப் பார்த்தால் உழக்கேர்லும் மிஞ்சாது.
உழுத எருதானாலும் ஒரு முடி நாற்றைத் தின்னவொட்டார்.
உழுதவனுக்கு ஊர்க்கணக்குப் பண்ணத் தெரியாது.
உழுதவன் கணக்குப் பார்த்தால் உழக்கேனும் மிஞ்சாது.
உழுவானுக்கு ஏற்ற கொழு, ஊரார்க்கேற்ற தொழு.
உழைக்கிற கழுதை எந்நாளைக்கும் உழைத்தே தீரவேண்டும்.
உளவன் இல்லாமல் ஊர் அழியுமா?
உளவு இல்லாமல் களவு இல்லை (நடக்குமா?).
உளி எத்தனை மலை எத்தனை?
2160 உளநாக்கும் தொண்டையும் அதிர அடைத்ததுபோல.
உள்வீட்டிலே கீரை வைத்துக்கொண்டு அயல்வீட்டுக்குப் போவானேன்?
உள்வீட்டுக் கடனும் உள்ளங்கைச் சிரங்கும் கெட்டது.
உள்ளக்கருத்து வள்ளலுக்குத் தெரியும்.
உள்ளங்கைப் பாற்சோற்றை விட்டுப் புறங்கையை நக்கியது போல.
உள்ளங்கைப் புண்ணுக்குக் கண்ணாடி ஏன்?

உள்ளங்கையில் அஞ்சுகொண்டை முடிக்கிறேன்.
உள்ளங்கையில் உரோமம் முளைத்ததாயின், அறிவிலான் அடக்குவான்.
உள்ளங்கையில் தேனை வைத்துக்கொண்டு புறங்கையை நக்கினாற்போல.
உள்ளங்கையில் நெல்லிக்கனிபோல.
2170 உள்ளங்கையில் (அகங்கையில்) போட்டுப் புறங்கையை நக்கலாமா?

உள்ளங்கையில் லக்கிரி (இலை, கறி, கீரை) இட்டவர்களை உள்ளளவும் நினை.
உள்ளங்கையில் வைகுண்டம் காட்டுகிறவன்.
உள்ளது சொல்ல ஊருமல்ல, நல்லது சொல்ல நாடுமல்ல.
உள்ளது போகாது, இல்லது வாராது.
உள்ளதும் கெட்டதடா நொள்ளைக்கண்ணா.
உள்ள தெய்வங்களை யெல்லாம் ஒருமிக்க வணங்கினாலும், பிள்ளை கொடுக்கிற தெய்வம் புருடன்.
உள்ளதைக் கொண்டு இல்லதைப் பாராட்டலாம்.
உள்ளதைச் சொல்லி மெலிந்தேன், நொள்ளைக்கண்ணாச்சி பிச்சைபோடு.
உள்ளதைச் சொன்னவன் ஊருக்குப் பொல்லாதவன்.
2180 உள்ளதைச் சொன்னால் உடம்பெரிச்சல்.

உள்ளதைச் சொன்னால் உடம்பெல்லாம் புண்ணாம்.
உள்ளதைச் சொன்னால் ஊருக்குப் பகை.
உள்ளதைச் சொன்னால் நொள்ளைக்கண்ணிக்கு நோப்பாளம்.
உள்ளதையும் கெடுத்தான் உதறுகாலி வந்து.
உள்ளதையும் கெடுத்தான் [நொள்ளை] கொள்ளிக்கண்ணன்.
உள்ளதை விற்று நல்லதை (உல்லத்தை)க் கொள்ளு.
உள்ளத்தில் ஒன்றும் குறையாது கள்ளமில்லா மனத்தார்க்கு.
உள்ள பிள்ளை உரலை நக்கிக்கொண்டிருக்க, மற்றொரு பிள்ளைக்குத் திருப்பதிக்கு நடக்கிறாள்.
உள்ளமாற்றைக் காட்டும் உரைகல்லும் மெழுகுண்டையும்.
2190 உள்ளம் தீயெரிய உதடு பழஞ்சொரிய.

உள்ளவனிடம் கள்ளன் போனாற்போல.
உள்ளாளில்லாமற் கோட்டை அழியாது.
உள்ளாளும் கள்ளாளும் கூட்டமா?
உள்ளிப்பூண்டுக்கு எத்தனை வாசனை கட்டினாலும் தூர்க்கந்தத்தையே வீசும்.

உள்

உள்ளியிட உள்ளியிட உள்ளே போச்சுது.
உள்ளிருந்தார்க்குத் தெரியும் உள் வருத்தம்.
உள்ளுக்குள்ளே (உள்ளூற) கொட்டினதேளே, ஒரு மந்திரம்
உள்ளூரிலே ஓணான் பிடிக்காதவன் உடையார்பாளையம் போய் உடும்பு பிடிப்பானா?
2200 உள்ளூரிலே விலைப்படாத மாடா அயலூரிலே விலைப்படும்?
உள்ளூர் மருமகனும் உழுகிற கடாவும் சரி.
உள்ளே பகையும் உதட்டிலே உறவுமா?
உள்ளே பகையும் உதட்டிலே உறவும் கள்ளமில்லா மனதுக்கு ஏன்?
உள்ளே பார்த்தால் ஓக்காளம், வெளியே பார்த்தால் மேற்பூச்சு (டம்பம், நிம்மினும் பூச்சி).
உறங்கின நரிக்கு உணவு கிட்டாது.
உறவிலே நஞ்சு கலக்கிறதா?
உறவு உண்ணாமல் கெட்டது, உடம்பு உடுக்காமல் கெட்டது.
உறவு உறவுதான், பறியிலே கை வைக்காதே.
உறவுக்கு ஒன்பதுபடி ஊருக்குப் பத்துபடி.
2210 உறவுக்கும் பகைக்கும் பொருளே துணை (காரணம்).
உறவுதான், ப்யிரிலே கையை வையாதே.
உறவுபோகாமல் கெட்டது, கடன் கேட்காமல் கெட்டது.
உறவுபோல இருந்து குளவிபோலக் கொட்டுகிறதா?
உறி அற மூளி நாய்க்கு வேட்டை.
உறிப்பணம் போய்த் தெருச்சண்டையை இழுக்கிறது.
உறியிலே கட்டித் தூக்கினாலும் அழுகற்பூசணிக்காய் அழுகலே.
உறியிலே தயிரிருக்க ஊரெங்கும் வெண்ணெய்க்கு அலைவானேன்?
உறியிலே வெண்ணெயிருக்க நெய்க்கலைவானேன்?
உறுதியான காரியம் ஒருபோதும் கெடாது.
2220 உறு தீங்குக்கு உதவாதவன் உற்றவனா?
உறை மோருக்கு இடமில்லாத வீட்டில் விலைமோருக்குப் போனதுபோல்.
உற்சாகம் செய்தால் மச்சைத்தாண்டுவான்.
உற்றகணவனும் ஒரு நெல்லும் உண்டானால் சித்திரம் போலே குடிவாழ்க்கை செய்யலாம்.
உற்ற சினேகிதன் உயிர்க்கு அமிர்தம்.
உற்றது சொல்ல அற்றது பொருந்தும்.

உற்றது சொல்ல ஊரும் அல்ல, நல்லது சொல்ல நாடும் அல்ல.

உற்றார் உதவுவரோ அன்னியர் உதவுவரோ?

உற்றார்க்கு ஒரு பிள்ளை கொடான், நமனுக்கு நாலு பிள்ளை கொடுப்பான்.

உற்றார் தின்றால் புற்றாய் விளையும், ஊரார் தின்றால் போராய் விளையும்.

2230 உற்றுப்பார்க்கில் சுற்றம் இல்லை.

உற்றுப்பார்த்த பார்வையிலே ஒன்பதுபேர் பட்டுப்போவார்.

உனக்காச்சு எனக்காச்சு ஒருகை பார்க்கவேண்டும்.

உனக்கு உட்பட்டுப் பின்பாட்டுப் பாடுகிற மனிதர்கள் போல.

உனக்கு ஒட்(

உனக்கு ஒரு பேச்சு, எனக்கு ஒரு மூச்சு.

உனக்கு முதுகு வளைகிறதா?

உனக்கும் பேபே, உன் அப்பனுக்கும் பேபே.

உனக்கு யான் அபயம், எனக்கு நீ அபயம்.

உன் அப்பன் மேலே ஆணை என் மேலே ஆசையாயிருக்க வேண்டும்.

2240 உன் உபசாரம் என் பிராணனுக்கு வந்தது.

உன் காரியம் முப்பத்திரண்டிலே.

உன் காலை நீயே கும்பிட்டுக்கொள்ளாதே.

உன் கொண்டை குலைய.

உன் சமர்த்திலே குண்டு பாயாது.

உன் சொல்லிலே உப்பும் இல்லை, புளியும் இல்லை, பசையும் இல்லை.

உன் தாலி அறுக்கச்சே ஒரு கூடைத்தாலி ஒருமிக்க அறுக்க

உன் தாலி அறுந்து தண்ணீர்ப்பானையில் விழ.

உன் தொடையைப் பாம்பு பிடுங்க.

உன் நெஞ்சில் தட்டிப்பார் (தொட்டுப் பார்).

2250 உன் பாடு கொள்ளைதானே.

உன பிள்ளையைத தினறு தணணீா குடிக்க.

உன் பெண்சாதி தாலி பிணத்தின் பேரில் விழ.

உன் பொங்கு குங்க.

உன் மதம் மண்ணாய்ப்போக.

உன் முறுக்குத்திருக்கு எல்லாம் என் உடுப்புக்குள்ளே.

உன் வண்டவாளம் எல்லாம் எனக்குத் தெரியும் (வெளிப் பட்டுப்போச்சு).

உன் வாயிலே சீதேவி.
உன் வாயிலே மண்விழ.
உன்னை அடித்துப் போட்டால் பத்துக்காணிக்கு எருவாகும்.
2260 உன்னை அள்ளத்துள்ளக் கொண்டுபோக.
உன்னைக் கடலிலே கைகழுவினேன்.
உன்னைக் கொடுப்பேனோ ஒருகாசு, உன்னோடு போச்சுது புரட்டாசி.
உன்னைக் கொடுப்பேனோ சென்னைக்கூனி, நீ சுமை சுமந்தல்லவோ கூனிப்போனாய்?
உன்னைப் பாடையிலேவைத்துப் பயணம் இட.
உன்னைப்பிடி என்னைப்பிடி உலகாத்தாள் தலையைப்பிடி.
உன்னைப்பிடி என்னைப்பிடி என்றாய்விட்டது.
உன்னைப் பிழிந்தெடுத்துப் போடுவேன்.
உன்னை வஞ்சித்தவனை ஒருபோதும் நம்பாதே.
உன்னை வெட்டிப் பலிபோட.
2270 உன்னோடே பிறந்ததில் மண்ணோடே பிறக்கலாம்.

<u>ஊ</u>சல் ஆடித் தன்னிலையில் நிற்கும்.
ஊசி ஒருமுழத் துணியையாவது கொடுக்கும், உற்றார் அது தானும் கொடார்கள் (என்ன கொடுப்பார்?)
ஊசி கொள்ளப்போய்த் துலாக்கணக்குப் பார்த்ததுபோல்.
ஊசி கோக்கிறதற்கு ஊரில் துழாவாரம் ஏன்?
ஊசிக் கண்ணிலே ஆகாயம் பார்த்ததுபோல.
ஊசிக்கு ஊசி எதிரேறிப் பாயுமா?
ஊசிக்குக் கள்ளன் உடனே இருப்பான் (புறப்படுவான், வருவான்).
ஊசி பொன்னானால் என்ன பெறும்?
ஊசி போகிறது கணக்குப் பார்ப்பான், பூசனிக்காய் போகிறது தெரியாது.
2280 ஊசிபோலத் தொண்டையும், சாலுபோல வயிறும்.
ஊசிபோல மிடறும், தாழிபோல வயிறும்.
ஊசி மலிவென்று சீமைக்குப் போகலாமா?
ஊசி முனையிலே நிற்கிறான்.
ஊசி முனையில்தவம் செய்தாலும் (உள்ளதுதான் கிடைக்கும்) உபதேசிக்கில்லை மோட்சம்.
ஊசியின் காதிலே ஒட்டகம் நுழைந்தாலும் பரமபதத்தின் வாசலிலே பணக்காரன் நுழையமாட்டான்.
ஊசியின் காதில் ஒட்டகம் நுழையுமா?
ஊசியை ஊசிக்காந்தம் இழுக்கும், உத்தமனை சிநேகம் இழுக்கும்.

ஊணன் கருமம் இழந்தான், உலுத்தன் பெயர் இழந்தான்.
ஊணினால் உறவு, பூணினால் அழகு.
2290 ஊணினால் புத்தி, பூணினால் சாதி.
ஊணுக்கு முந்தவேண்டும், கோளுக்குப் பிந்தவேண்டும்.
ஊணுக்கு முந்து, வேலைக்குப் பிந்து.
ஊணும் இல்லை உறக்கமும் இல்லை.
ஊணும் உறக்கமும் ஒத்தார்க்கு ஒத்தபடி.
ஊண் அற்றபோதே உடலற்றது.
ஊண் அற்றபோதே உறவு அற்றது.
ஊண் ஒடுங்க வீண் ஒடுங்கும்.
ஊண்பாக்கு ஒழிய வீண்பாக்கு ஆகாது.
ஊத அறிந்தவன் வாதி, உப்பு அறிந்தவன் யோகி.
2300 ஊதாரிக்குப் பொன்னும் துரும்பு.
ஊதினால் போம் உறிஞ்சினால் வரும்.
ஊதுகிறசங்கை ஊதினால் விடிகிறபொழுது விடிகிறது.
ஊத்தை திரண்டு அச்சாணி ஆகுமா?
ஊத்தை திரண்டு கழுக்காணி ஆச்சுது.
ஊத்தை போகக் குளித்தவனும் இல்லை, பசிபோகத் தின்றவனுமில்லை.
ஊத்தை போனாலும் உள்வினை போகாது (தீராது).
ஊத்தைப் பல்லுக்கு விளாங்காய் சேர்ந்தது போல.
ஊத்தைப்பெண் பெற்றபிள்ளை கழுவக் கழுவத் தேயும்.
ஊத்தைவாயன் தேடக் கர்ப்பூரவாயன் (நாற்றவாயன்) தின்ன.
2310 ஊமை ஊரைக் கெடுக்கும், ஆமை கிணற்றைக் கெடுக்கும்.
ஊமை ஊரைக் கெடுக்கும், பெருச்சாளி வீட்டைக் கெடுக்கும்.
ஊமை கண்ட கனாப்போல சீமை பட்டணம் ஆகுமா?
ஊமை கண்ட கனாப்போல்.
ஊமைக்கு உளறுவாயன் உற்பாதபிண்டம்.
ஊமைக்குத் தெத்துவாயன் உயர்ந்த வாய்ச்சாலகன்.
ஊமை பிரசங்கம்பண்ண செவிடன் கேட்டதுபோல.
ஊமையன் கனவுகண்டதுபோலச் சிரிக்கிறான்.
ஊமையன் பாட, சப்பாணி ஆட, செவிடன் கேட்க, குருடன் பார்க்க.
ஊமையன் பேச்சு பழகினபேருக்குத் தெரியும்.
2320 ஊமையாயிருந்தால் செவிடும் உண்டு.
ஊமையும் அல்ல, செவிடும் அல்ல.
ஊமையும் ஊமையும் மூக்கைச் சொறிந்தாற்போல.

ஊராரே வாருங்கள் முதுகு நீர் குத்துங்கள்.
ஊராரைப் பகைத்து உயிரோடு இருந்தவரில்லை.
ஊரார் உடைமைக்கு உலை வைக்கிறான்.
ஊரார் உடைமைக்கு ஓயாண்டிபோல் திரிவான்.
ஊரார் உடைமைக்குப் பேயாய்ப் பறக்கிறான்.
ஊரார் எருமை பால் கறக்கிறது, நீயும் ஊட்டுகிறாய் நானும் [illegible]
ஊரார் கணக்கு உடையவன் பிடரியிலே.
2330 ஊரார் பண்டம் உமிபோல், தன் பண்டம் தங்கம்போல்.
ஊரார் பிள்ளையை ஊட்டிவளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்.
ஊரார் வீட்டுக் கலியாணமே, என் அவிழ்ந்தாய் கோவணமே?
ஊரார்வீட்டுச் சோற்றைப் பார், ஓசுபாடி வயிற்றைப் பார்.
ஊரார் வீட்டு நெய்யே என் பெண்டாட்டி கையே.
ஊராளுகிறவனுக்குப் பேலப் புழைக்கடையில்லை.
ஊரிலே கலியாணம் மாரிலே சந்தனம்.
ஊரிலேயும் போவாள், சொன்னால் அழுவாள்.
ஊரில் ஒருவனே தோழன், ஆருமற்றதே தாரம்.
ஊரில் எளியோரை வண்ணான் அறிவான், சாதிப் பொன் பூண்டாரைத் தட்டான் அறிவான்.
2340 ஊரின் இளக்காரம் வண்ணானுக்குத் தெரியும்.
ஊருகிற அட்டைக்குக் காலெத்தனை யென்றறிவான்.
ஊருக்காகாத பிள்ளை தாய்க்கும் ஆகான்.
ஊருக்காகாதது வீட்டுக்கும் ஆகாது.
ஊருக்காகாதவன் வீட்டுக்கும் ஆகான்.
ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோவிலாண்டி.
ஊருக்கு உழைக்கிற கிராமணி.
ஊருக்கு ஓமல், வீட்டுக்கு வயிற்றெரிச்சல்.
ஊருக்குப் பால் வார்த்து உண்கிறாயா, உடம்புக்குப் பால் வார்த்து உண்கிறாயா?
ஊருக்குப் பேரும் உறவின் முறைக்குப் பொல்லாப்பும்.
2350 ஊருக்குப் போனவர் சேதி சுவாமிக்குத் தெரியும்.
ஊருக்கு வேலைசெய்வதே மணியமா யிருக்கிறான்.
ஊருக் கெல்லாம் ஒருவழி உனக்கு ஒருவழியா?
ஊருக் கெல்லாம் சாத்திரம் சொல்லுகிற பல்லி கழுநீர் (காடி, கூழ்)ப் பானையில் விழுந்தாற் போல்.
ஊருக் கொரு தேவடியாள் ஆருக்கென்று ஆடுவாள்?
ஊரெங்கும் சம்பை என் பேரோ வம்பை.

ஊரெங்கும் பேர் வீடு பட்டினி.
ஊரெல்லாம் உற்றார், அந்தி பட்டால் பொதுச்சந்தியிலே.
ஊரெல்லாம் சுத்தி, எனக்கென்ன புத்தி, என் பேர் முத்தி.
ஊரெல்லாம் சுற்றி என்பேர் முத்தி.
2360 ஊரெல்லாம் வாழ்கிறதென்று வீடெல்லாம் அழுது புரண்டால் வருமா?
ஊரென்று இருந்தால் சேரியும் (பறைச்சேரியும்) இருக்கும்.
ஊரை உழக்கால் அளக்கிறாள், நாட்டை நாழியால் அளக்கிறாள்.
ஊரைச் சொன்னாலும் பேரைச் சொல்லாதே.
ஊரைப் பகைத்தேனோ ஒருநொடியில் கெட்டேனோ?
ஊரைப் பார்க்கச் சொன்னால் சேரியைப் பார்க்கிறான்.
ஊரை வளைத்தாலும் உற்றதுணை இல்லை, நாட்டை வளைத்தாலும் நல்லதுணை யில்லை.
ஊர் அறிந்த பார்ப்பான்.
ஊர் ஆளுகிறவன் பெண்டு பிடித்தால் ஆருடன் சொல்லி முறையிடுகிறது?
ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம்.
2370 ஊர் இருக்கிறது ஓடு இருக்கிறது.
ஊர் இருக்கிறது பிச்சை போட, ஓடிருக்கிறது வாங்கிக்
ஊர் இருக்கிறது வாய
ஊர் உண்டாகியல்லவோ கிழக்கு மேற்கு உண்டாக வேண்டும்.
ஊர் உண்டு பிச்சைக்கு, குளம் உண்டு தண்ணீருக்கு.
ஊர் ஒக்க ஓடவேண்டும்.
ஊர் ஒச்சம் வீடு பட்டினி.
ஊர் ஓட ஒக்க ஓடு, நாடோட நடுவே ஓடு.
ஊர் ஓடச்சே ஒக்க ஓடவேண்டும்.
ஊர் ஓமலானதல்லால் ஒன்றுமறியேன்.
2380 ஊர் ஓரத்திற் கொல்லை, உழுதவனுக்குப் பயிர் இல்லை.
ஊர் கூடிச் செக்குத்தள்ள, வாணியன் எண்ணெய் கொண்டு போக.
ஊர் கூடிச் செக்குத் தள்ளினாற் போல.
ஊர்க் கடனும் உள்ளங்கைச் சிரங்கும் போல.
ஊர்க்குருவிமேல் இராமபாணம் தொடுக்கிறதா?
ஊர்க்கோழியும் நாட்டுக்கோழியும் கூடினால் உரலிலுள்ள புழுங்கலரிசிக்குச் சேதம்.
ஊர் நட்டம் ஊரிலே, தேர் நட்டம் தெருவிலே.

ஊர் நல்லதோ வாய் நல்லதோ?
ஊர்ப்பிள்ளையை முத்தமிட்டால், உதட்டுக்குக் கேடு.
ஊர் வாயைப் படலிட்டு மூடலாமா?
2390 ஊர் வாயை மூட உலைமூடி இல்லை.
ஊர் வாழ்ந்தால் ஓட்டுப் பிச்சைக்கும் வழிஇருக்கும்.
ஊழிக்காய்ச்சல் அதிகமானால், சூனியக்காரன் பாடு கொள்ளை.
ஊழி பெயரினும் கலங்கார் உரவோர்.
ஊழி பேரினும் ஊக்கமது கைவிடேல்.
ஊழிற் பெருவலி ஒன்று உண்டோ?
ஊழும் உற்சாகமும் ஒத்துக்கொள்ளவேண்டும்.
ஊறச்சே துடைக்க வேண்டும்.
ஊருக்கிணறு உறங்காப்புலி, தீராவழக்கு திருக்கண்ண மங்கை.
ஊறுகாயைக் கடித்துக்கொண்டு ஒரு பானைச் சோற்றை என்னதல்ல என்பான்.
2400 ஊனமில்லான் மான மில்லான்.
ஊன் அற்றபோதே உளமற்றது.
ஊன்றக் கொடுத்த தடி, என் உச்சியை உடைக்கிறது.
ஊன்றக் கொடுத்த தடி, மண்டையைப் பிளந்தது.
எக்குப் புடைவை சோர்ந்தால் கைக்குண்டோ உபசாரம்?
எங்களால் ஒன்றுமில்லை எல்லாம் உங்கள் கருமம்.
எங்கள் ஆத்துக்காரரும் கச்சேரிக்குப் போய்வந்தார்.
எங்கள் வீட்டுக்குவந்தால் என்னகொண்டு வருகிறாய், உங்கள் வீட்டுக்கு வந்தால் என்ன தருகிறாய்?
எங்கும் சிதம்பரம் பொங்கி வழிகிறது.
எங்கும் மடமாய் இருக் [illegible]
2410 எங்கே அடித்தாலும் நாய் காலைத் தூக்கும்.
எங்கே அடித்தாலும் நாய்க்குக் காலிலே முடம்.
எங்கே திருடினாலும் கன்னக்கோல் வைக்க ஓர் இடம் வேண்டும்.
எங்கே புகையுண்டோ அங்கே நெருப்புமுண்டு.
எங்கேயோ இடித்தது வானமென்று இருந்தேன், தப்பாது என் தலையிலேயே இடித்தது.
எசமான் வெளியிலே போனால் பசங்களெல்லாம் கும்மாளம் போடுவார்கள்.
[illegible] உன சுத்தத்திலே வார்.
எச்சிலைக்குடித்தால் தாகம் தீருமா?
எச்சிலைக்கு நாய் அடித்துக்கொண்டு நிற்கிறதுபோல.

எச்சிலைத் தின்று ஏப்பம் இட்டாற்போல.
2420 எச்சிலைத் தின்று பசி தீருமா?
எச்சில் இரக்க அடிக்கும், பற்று பறக்க அடிக்கும்.
எச்சில் இரக்கும், தூமை (தீட்டு) துடைக்கும்.
எச்சில் எடுக்கச் சொன்னார்களா, எத்தனைபேர்கள் சாப்பிட்டதென்று எண்ணச் (கணக்கு கேட்கச்) சொன்னார்களா?
எச்சில் தின்றாலும் வயிறுநிறையத் தின்னவேண்டும், எச்சுக் கேட்டாலும் பொழுது விடியுமட்டும் கேட்கவேண்டும்.
எச்சிற் கல்லைக்கு இச்சகம் பேசுகிறது.
எச்சிற் கல்லைக்கு இதம் பாடுகிறது.
எச்சிற் கல்லைக்கு மண்ணாங்கட்டி ஆதரவு, மண்ணாங்கட்டிக்கு எச்சி இலை ஆதரவு.
எச்சிற் கையால் காக்கை ஓட்டமாட்டான்.
எச்சிற் கையால் காக்கை ஓட்டாதவன் பிச்சைகொடுப்பானா?
2430 எடுக்கப்போன சீமாட்டி இடுப்பு ஒடிந்து வீழ்ந்தாளாம்.
எடுக்கிறது எருதுமாட்டுச் சுமை, (தம்பி) படுக்கிறது பஞ்சணை மெத்தை.
எடுக்கிறது சந்தை கோபாலம், ஏறுகிறது தந்தப்பல்லக்கா?
எடுக்கிறது பிச்சை, ஏறுகிறது பல்லக்கு.
எடுக்கிறது வரட்டிச்சுமை, நடக்கிறது தங்கக்குமிழ்ப் பாதரட்சை.
எடுக்குமுன்னே கழுதைஇடுப்பு ஒடிந்து விழுந்ததாம்.
எடுத்த அடி மடங்குமா?
எடுத்த சுமை சுமந்தல்லவோ இறக்கவேண்டும்?
எடுத்தாலும் பங்காருப்பெட்டியை எடுக்கவேண்டும், இருந்தாலும் சிங்காரக்கழுவில் இருக்கவேண்டும்.
எடுத்தாளாத பொருள் உதவாது.
2440 எடுத்தாற்போல் தப்பட்டைக்காரன் பட்டான் (செத்தான்).
எடுத்துக் கவிழ்த்துப் பேசுகிறான்.
எடுத்து மூடிவிட்டு எதிரேவந்து நிற்பாள்.
எடுத்துவிட்ட எருது எத்தனைநாள் உழைக்கும்?
எடுத்துவிட்ட நாய் எத்தனை நாளைக்குக் குலைக்கும்?
எடுத்துவிட்ட மாடு எத்தனை தூரம் ஓடும்?
எடுப்பது பிச்சை ஏறுவது பல்லக்கு.
எடுப்பாரும் பிடிப்பாரும் உண்டானால் இளைப்பும் தவிப்பும் உண்டாகும்.
எடுப்பாரும் பிடிப்பாரும் உண்டானால் தம்பி களைத்தாற் போல் இருப்பான்.
எடுப்பாரைக் கண்டால் குடம் கூத்தாடும்.
2450 எடுப்பார் கைக்குழந்தை (கைப்பிள்ளை).

எடுப்பார் மழுவை, தடுப்பார் புலியை, கொடுப்பார் அருமை.
எடுப்புண்ட கலப்பை இருந்து உழுமா?
எட்டாக் கனியைப் பார்த்து இச்சித் தென்னபலன்?
எட்டாத பழம் புளிக்கும்.
எட்டாப் பழத்திற்குக் கொட்டாவி விட்டதுபோல.
எட்டாப் பூ தேவர்க்கு, எட்டும் பூ தங்களுக்கு.
எட்டாம் பேறு பெண் பிறந்தால் எட்டிப்பார்த்த வீடு குட்டிச்சுவர்.
எட்டிஎட்டிப் பார்த்து குட்டிச்சுவரிலே முட்டிக்கொள்ள லாமா?
எட்டிஎட்டிப் பார்ப்பாரும், எணிவைத்துப் பார்ப்பாரும், குட்டிச்சுவராலே குனிந்து நின்று பார்ப்பாரும் உண்டு.
2460 எட்டிக் குட்டி இறங்கிக் காலைபிடித்துக் கொள்ளுகிறது.
எட்டிப் பார்த்தாற்போல கொட்டிக்கொண்டு போகிறான்.
எட்டிக்குப் பால் வார்த்து வளர்த்தாலும் தித்திப்பு உண்டாகுமா?
எட்டி பழுத்தென்ன, ஈயாதார் வாழ்ந்தென்ன?
எட்டிப் பழத்தை இச்சிக்கிறதுபோல.
எட்டிப்பழத்தை இச்சிக்கிறதா?
எட்டி மரமானாலும் பச்சென்று இருக்கவேண்டும்.
எட்டி மரமானாலும் வைத்தவர்க்கு ஆசை.
எட்டியிலே கட்டுமாம்பழம் உண்ணலாமோ?
எட்டியுடனே சேர்ந்த இலவும் தீப்பட்டது.
2470 எட்டினமட்டும் வெட்டும் கத்தி, எட்டாதமட்டும் வெட்டும் பணம்.
எட்டினால் குடுமியைப் (சிகையைப்) பிடி, எட்டாவிட்டால் காலைப்பிடி.
எட்டுக் கிழவரும் ஒரு மொட்டைக் கிழவியைக் கட்டிக் கொண்டார்கள்.
எட்டுக் குஞ்சு அடித்தாலும் சட்டிக்கறி ஆகாது.
எட்டுச் சித்தாத்திரை ஒரு தட்டுதலுக்கு ஒக்கும்.
எட்டுச் செவ்வாய் எண்ணித் தலைமுழுகில் தப்பாமல் தலை போம்.
எட்டுப்படி அரிசி ஒரு கவளம்; எழூர் சண்டை ஓர் சிம்மாளம்.
எட்டு மிரண்டும் தெரியாத பேதை (நாத்தை).
எட்டு வருடத்து எருமைக்கடா ஏரிக்குப்போக வழி தேடும்.
எண் இல்லாதவர் கண் இல்லாதவர், எழுத்து இல்லாதவர் கழுத்து இல்லாதவர்.
2480 எண்சாண் உடம்பிலே எள்ளத்தனை இரத்தம் இல்லை.

எண்சாண் உடம்பிற்கும் சிரசே பிரதானம்.
எண்சாண் உடம்பும் ஒரு சாணானேன்.
எண்ணத் தொலையாது எட்டிலடங்காது.
எண்ணப்பட்ட குதிரை யெல்லாம் மண்ணைப் போட்டுக் கொள்ள, தட்டுவாணிக் குதிரை வந்து கொள்ளுக்கு அழு கிறதாம்.
எண்ணம் அற்ற இராசன் பன்றி வேட்டை ஆடினாற்போல்.
எண்ணம் எல்லாம் பொய், எமன் ஓலை (எளிதம்) மெய்.
எண்ணம் எல்லாம் பொய், எழுதிய எழுத்து மெய்.
எண்ணறக்கற்று எழுத்தற வாசித்தாலும் பெண்புத்தி பின் புத்தியே.
எண்ணிச் செய்கிறவன் செட்டி, எண்ணாமற் செய்கிறவன் மட்டி.
2490 எண்ணிச் செய்வது செட்டு, எண்ணாமற் செய்வது வேளாண்மை.
எண்ணிமுடியாது எட்டில அடங்காது.
எண்ணிய எண்ணம் என்னடி, அண்ணா என்று அழைத்த முறை என்னடி?
எண்ணிய குடிக்கு ஒரு மின்னிய குடி.
எண்ணினேன் கோடி இழப்பதறியாமல்.
எண்ணெயைத் தேய்க்கலாம் எழுத்தை மறைக்கலாம்.
எண்ணெய் கண்ட இடத்தில் தடவிக்கொண்டு சீப்புக்கண்ட இடத்தில் தலைவாரி (சிவி)க் கொள்ளுகிறது.
எண்ணெய்க் குடத்திலே பிடுங்கி எடுத்தாற்போல.
எண்ணெய்க் குடத்தைச் சுற்றும் எலும்புபோல.
எண்ணெய்க்குடமும் வெறுங்குடமும் முட்டினால் எதற்குச் சேதம்?
2500 எண்ணெய்க் குடம் உடைந்தாலும் ஐயோ, தண்ணீர்க்குடம் உடைந்தாலும் ஐயோ!
எண்ணெய்ச் செலவொழிய பிள்ளை பிழைத்த பாடு இல்லை.
எண்ணெய்ச் சேதமேயல்லாமல் பிள்ளை பிழைக்காது.
எண்ணெய்ப் பிள்ளையோ வண்ணப்பிள்ளையோ?
எண்ணெய் முந்துதோ திரி முந்துதோ?
எண்பது வயதுக்குமேல் மண்பவளம் கட்டிக்கொண்டா ளாம்.
எண்பது வேண்டாம் ஐம்பதும் முப்பதும் கொடு.
எண் மிகுத்தவனே திண் மிகுத்தவன்.
எதாகுதலம் பேசினால் அகப்பைச் சூனியம் வைப்பேன்.
எதார்த்தவாதி வெகுசன விரோதி.
2510 எதிரி இளப்பமானால் கோபம் சண்டப் பிரசண்டம்.

எதிரிக்கு இளக்காரமாய்ச் சொல்லுகிறதா?
எதிரிக்குச் சகுனத்தடையென்று மூக்கை அறுத்துக் கொள்ளுகிறதா?
எதிர் தும்மல் எடுத்துக்கொடுக்கும்.
எதிர்த்தவர் மார்புக்கு ஆணியாயிரு.
எதிர்த்தவன் ஏழை என்றால் கோபம் சண்டாளம்.
எதிர்த்த வீடு ஏகாலி வீடு, அடுத்த வீடு அம்பட்டன் வீடு.
எதிர் வீடு ஏகாலிவீடு, பக்கத்து வீடு பணிசெய்வோன் வீடு, அடுத்த வீடு அம்பட்டன் வீடு.
எது எப்படிப்போனாலும் தன் காரியம் தனக்கு.
எதுக்கும் உருகாதவன் இச்சைக்குருகுவான்.
2520 எதை அடக்காவிட்டாலும் நாக்கை அடக்கவேண்டும்.

எதை வாரிக் கட்டிக்கொண்டு போகிறது?
எத்தனை ஏழை ஆனாலும் எலுமிச்சங்காய் அத்தனைபொன் இல்லாமற் போமா?
எத்தனைதரம் சொன்னாலும் பறங்கி வெற்றிலை தின்னான்.
எத்தனைதான் துலக்கினாலும் பித்தளை நாற்றம் போகுமா?
எத்தனைபுடம் இட்டாலும் இரும்பு பசும் பொன் ஆகுமா?
எத்தனைவித்தை கற்றாலும் செத்தவனைப் பிழைப்பிக்க அறியான்.
எத்தால் வாழலாம் ஒத்தால் வாழலாம்.
எத்தாற் பிழைக்கலாம் ஒத்தாற் பிழைக்கலாம்.
எத்திலே பிள்ளை பெற்று இரவலிலே தாலாட்டுகிறது.
2530 எத்தேச காலமும் வற்றாப் பெருஞ்சமுத்திரம்.

எந்த ஆயுதமும தீட்டத்தீட்டக் கூர்.
எந்த இலை உதிர்ந்தாலும் ஈச்சம் இலை உதிராது.
எந்த மடத்துக்கு எந்த ஆண்டி சதம்.
எந்தவாக்குப் பொய்த்தாலும் சந்தைவாக்குப் பொய்யாது.
எந்நேரமும் அவள் பேரில் கண்ணாய் இருக்கிறான்.
எமனுக்கு வழி காட்டுவான்.
எமனையும் நமனையும பலகாரம் பண்ணுவான்.
எமன் ஏறுகிற கடாவாயிருந்தாலும் உழுது விடுவான்.
எமன் கையில் அகப்பட்ட உயிர்போல.
2540 எமன் நினைக்கவும் பிள்ளை பிழைக்குமா?

எமன் பிள்ளையைப் பேய் பிடிக்குமா?
எமன் வாயில் இருந்து வந்ததுபோல்
எய்கிறவன் எய்தால் அம்பு என்ன செய்யும்?
எய்தவன் இருக்க அம்பை நோவானேன்?
எரிகிற கொள்ளியில் எந்தக் கொள்ளி நல்லது?

எரிகிற கொள்ளியை ஏறத் தள்ளினதுபோல்.
எரிகிறதைப் பிடுங்கினால் கொதிக்கிறது அடங்கும்.
எரிகிற நெருப்பிலே தண்ணீரைக் கொட்டலாமா?
எரிகிற நெருப்பிலே நெய்விட லாமா?
2550 எரிகிற நெருப்பை எண்ணெய்விட்டு அடக்கலாமா?

எரிகிற விளக்கானாலும் தூண்டுகோல் ஒன்று வேண்டும்.
எரிகிற வீட்டிற் பிடுங்கினது இலாபம்.
எரிகிற வீட்டை அவிக்கக் கிணறு வெட்ட நாள் பார்த்தது போல்.
எரிச்சல் வந்தல்லவோ கடிக்கும்; எழுப்பிவிட்டா கடிக்கும்?
எரிந்த பசியில் இழந்த மணியைத் தேடப்போனாற்போல.
எரு உதவுவதுபோல் இனத்தார் உதவார்.
எருக் குழையின்றி ஏர் பிடியாது.
எருதின் புண்ணிற்குச் சாம்பல் மருந்து.
எருது ஈன்றது எனுமுனம் என்ன கன்று என்றதுபோல.
2560 எருது ஈன்றது என்றால் தொழுவத்திலே கட்டு என்றது போல.

எருது ஏழையானால் பசு பத்தினித்வம் கொண்டாடும்.
எருது ஏறவிட்டால் பசு பத்தினிதான்.
எருது கெட்டார்க்கும் எட்டே கடுக்காய், இளம்பிள்ளைத் தாய்ச்சிக்கும் எட்டே கடுக்காய்.
எருது கொழுத்தால் தொழுவத்தில் இராது, பறையன் கொழுத்தால் பாயில் இரான்.
எருது கோபம் கொண்டு பரதேசம் போனதுபோல்.
எருதுக்கு நோய்வந்தால் கொட்டகையைச் சுடுகிறதா?
எருதுக்கும் தன் புண் அழற்சி; காக்கைக்கும் தன் பசி அழற்சி.
எருது நினைத்த இடத்திலே தொழுவம் கட்டுகிறதா?
எருது நினைத்த இடத்திலே புன்செய்க்குழுகிறதா?
2570 எருது நோயை நினைக்கும், காக்கை பசியை நினைக்கும்.

எருது நோய் காக்கை அறியுமா?
எருது நோய் காக்கைக்குத் தெரியுமா?
எருது மறைவிற் புல்லுத் தின்கிறாயா?
எருதும் எருதும் போராட நடுப்புல்லுத் தேய்ந்தாற்போல.
எருதும் வண்டியும் ஒத்தால் மேடுபள்ளம் ஏது?
எருது வாங்குமுன்னே புன்செய்க்கு உழு என்கிறாய்.
எருமை இருந்தல்லவோ பால் கறக்கவேண்டும்?
எருமைக்கடா என்றாலும் குழந்தைக்குப் பால் ஒரு பீர் இல்லையா என்கிறான்.

எருமைக்கொம்பு நனைகிறதற்குள்ளே எழுபது தரம் மழை வருகிறது.
2580 எருமைக் கோமயம் எக்கியத்திற்கு ஆகுமா?
எருமைச் சாணி ஓமத்திற்கு ஆகுமா?
எருமை மாட்டின்மேல் எத்தனை சூடு இருந்தாலும் தெரியாது, பசுமாட்டின்மேல் ஒரு சூடு இருந்தாலும் தெரியும்.
எருமை மாட்டின்மேல் மழை பெய்ததுபோல.
எருமை மாட்டைத் தண்ணீரில் போட்டுக்கொண்டு விலை பார்க்கிறது.
எருமை முட்டைப் புராணம் வாசிக்கிறான்.
எருமை மூத்திரம் எக்கியத்திற்கு ஆகுமா?
எருமையிலும் வெள்ளாடு ஏறக் கறக்குமா?
எருமை வாங்குமுன் என் விலை கூறுகிறாய்?
எருவுக்குப் போனவன் இளையாளைக் கைப்பிடித்தாற்போல்.
2590 எருவுக்குப் போனவன் எலுமிச்சம் பழம் எடுத்ததுபோல்.
எலி அம்மணத்தோடே போகிறதென்கிறான்.
எலி அழுதால் பூனை விடுமா?
எலி அழுது புலம்பினாலும் பூனை பிடித்தது விடாது.
எலி இருக்கிற இடத்தில் பாம்பு இருக்கும்.
எலி கட்டப் பாம்பு குடிகொள்ள.
எலிக்கு அனுகூலம், பாம்பு பிடாரனுக்கு அஞ்சுதல்; எளியார்க்கு அனுகூலம், வலியார் ராசனுக்கு அஞ்சுதல்.
எலிக்குத் திண்டாட்டம் பூனைக்குக் கொண்டாட்டம்.
எலிக்குப் பயந்து வீட்டைச் சுட்டதுபோல.
எலிக்குப் பயப்பட்டு வீட்டில் தீயை வைத்ததுபோல்.
2600 எலிக்குப் பிராணவத்தை பூனைக்குக் கொண்டாட்டம்.
எலிக்கு மணியம் சுவரை அறுக்கிறதுதான்.
எலி தலையிலே கோடாலி விழுந்ததுபோல்.
எலி தலையிற் கோபுரம் இடிந்து விழுந்தாற்போல.
எலி பூனைக்குச் சலாம் பண்ணுவதுபோல்.
எலி பூனையை வெல்லுமா?
எலிப் பிழுக்கை இறப்பில் இருந்தென்ன, வரப்பில் இருந்தென்ன?
எலியும் பூனையும் இணைந்து விளையாடினதுபோல்.
எலியும் பூனையும் போல் இருக்கிறது.
எலியைக் கண்டு பூனை எக்கம் அடையுமா?
2610 எலியைக் கண்டு பூனை ஏங்கிஏங்கிக் கிடக்குமோ?
எலியோ பூனையோ சரசரென்கிறது, என்னடி சிறுக்கி பயமுறுத்துகிறாய்?

எலி வளையானாலும் தனி வளை வேண்டும்.
எலி வீடுகட்டப் பாம்பு குடிகொள்ளும்.
எலி வேட்டைக்குத் தவிலடிப்பா ?
எலி வேட்டையாடத் தவில் வேண்டுமா ?
எலுமிச்சங் காய்க்குப் புளிப்பு ஏற்றுகிறது போல்.
எலுமிச்சஞ் செடிக்கு எருப் போட்டாற் போல்.
எலும்பு இல்லா நா எல்லாம் பேசும்
எலும்பு கடிக்கிற நாய் இரும்பைக் கடிக்குமா ?
1620 எலும்பு கடிக்கிற நாய்க்குப் பருப்புஞ்சோறும் ஏன் ?

எலும்பைக் கடிப்பானேன், சொந்தப் பல்லும் போவானேன்.
எலும்பைத் தின்று சதையைக் கொடுத்து வளர்த்தாள்.
எல்லப்ப செட்டி லக்க ஏகலக்க.
எல்லா ஓட்டும் குல்லாவிலே.
எல்லாத் தட்டோட்டும் என் குல்லாவுக்குள்ளே இருக்கிறது.
எல்லாத் தலையிலும் எட்டு எழுத்து, பாவி என் தலையிலே பத்து எழுத்து.
எல்லாத்துக்கும் (எல்லாருக்கும்) உண்டு இலையும் பழுப்பும்.
எல்லாத்துக்கும் ஒரு அழுகை அழுங்கள்.
எல்லாத்துக்கும் ஒரு சொட்டு உண்டு.
2630 எல்லாத் தேசத்துக்கும் இந்தியா பார்த்திட்டதே பிச்சை.

எல்லா மசகமும் சாயந்தரத்திற்றான் வருகிறது.
எல்லாம் அறிந்தவனும் இல்லை, ஒன்றும் அறியாதவனும்

எல்லாம் அறிந்தும், கழுநீர்ப் பானையில் கையிடுகிறதா ?
எல்லாம் இருக்கிறது பெட்டியிலே, இலைக்கறி கடையச் சட்டி இல்லை.
எல்லாம் ஏறி இளைத்த குதிரையின்மேல் தம்பி பொற்பட்டம் கட்டிப் புறப்பட்டான்.
எல்லாம் சரியென்று எண்ணலாமா ?
எல்லாம் தெரிந்தது நாரி ! நிமிட்டி ஏற்றடி விளக்கை.
எல்லாம் மாயை என்கிறதைக் கண்டேன்.
எல்லாருக்கும் உண்டு ஒவ்வொன் றெளிது.
2640 எல்லாருக்கும் சனி துரும்பு போல, எனக்குச் சனி மலை போல.

எல்லாருக்கும் சொல்லுமாம் பல்லி, தான்போய்க் காடிப் பானையில் விழுமாம் பல்லி.

எல்லாரும் ஆளின் கீழே நுழைந்தால், இவன் ஆளின் நிழலின் கீழே நுழைவான்.
எல்லாரும் என் மண்டையில் பொங்கித் தின்கிறார்கள்.
எல்லாரும் ஏறி இளைத்த குதிரைமேல் சாத்திரியார் ஏறிச் சறுக்கி விழுந்தார்.
எல்லாரும் கப்பல் ஏறியாயிற்று, இனி அம்மானார் பொற் பட்டம் கட்டப்போகிறார்.
எல்லாரும் கூடி எனக்குக் குல்லா போட்டார்கள்.
எல்லாரும் கூடி குல்லாவைத் தந்தார்கள்.
எல்லாரும் பல்லக்கேறினால், பல்லக்கை யார் தூக்குகிறது?
எல்லாரும் பாக்கு, இவன் ஒரு தோப்பு.
2650 எல்லாரும் மனிதரா, கல்லெல்லாம் மாணிக்கமா?

எல்லார் வீட்டுத் தோசையிலும் ஓட்டை.
எல்லா வேலையும் செய்வான், செத்தால் பிழைக்கமாட்டான்.
எல்லை பாழ்பட்டாலும், கொல்லைக் கடமை விடார்.
எவற்றைக் காவாதேபோனாலும், நாவைக் காக்கவேண்டும்.
எவன் ஆகிலும், தான் சாக மருந்து உண்பானா?
எழுத வழங்காத வாழ்க்கை, கழுதை புரண்ட களம்.
எழுத வாசிக்கத் தெரியாமற் போனாலும், எடுத்துக் கவிழ்க்கத் தெரியும்.
எழுதாக் கடனுக்கு அழுதால் தீருமா?
எழுதாப் பொறிக்கு அழுதால் தீருமா?
2660 எழுதியவன் ஏட்டைக் கெடுத்தான்; படித்தவன் பாட்டைக் கெடுத்தான்.

எழுதிய விதி அழுதால் தீருமா?
எழுதி வழங்கான் வாழ்க்கை, கழுதை புரண்ட களம்.
எழுதுகிறது பெரிதல்ல, இனம் அறிந்து சேர்க்கிறது பெரிது.
எழுதுவது அருமை, எழுதினதைப் பழுதற வாசிப்பது அதிலும் அருமை.
எழுத்தறச் சொன்னாலும், பெண் புத்தி பின் புத்தி.
எழுத்து அறிந்தமன்னன், கிழித்து எறிந்தான் ஓலை.
எழுத்து அறிந்த வண்ணான், குறித்து எறிந்தான் ஓலை.
எழுத்துக்குப் பால்மாறின கணக்கனும் உடுக்கைக்குப் பால் மாறின தாசியும் வருத்தம் அடைவார்கள்.
எழுந்தருளும், கோவிலுக்கு விளக்குப் பிடிக்க.
2670 எழுந்திருப்பாள், கால் இல்லை.

எழுபது சென்றாலும், பறை எவினால்தான் செய்யும்.
எழுபதுபேரைக் கொன்ற படுகீலி.
எளியவள் பிள்ளை ஆனாலும், செய்யவேண்டிய சடங்கு செய்யவேண்டும்.
எளியவனுக்குப் பெண்டாய் இருக்கிறதிலும், வலியவனுக்கு அடிமை ஆகிறது நல்லது.
எளியவனைக் கண்டு புளியங்காய் பறித்தாற்போல்.
எளியவனைக் கண்டு வாயால் ஏய்க்கிறான்.
எளியவன் பெண்டாட்டி எல்லார்க்கும் மைத்துனி.
எளியாரை எதிர் இட்டுகொண்டால் பிராணஹானி.
எளியாரை வலியா ரடித்தால் வலியாரை (தெய்வம்) வாசற் படி அடிக்கும்.
2680 எள் அத்தனையை மலை அத்தனை ஆக்குகிறது.

எள்ளிலும் சிறிய இலை என்ன இலை, விடத்தாரி இலை.
எள்ளு என்கிறதற்கு முன்னே, எண்ணெய் கொண்டுவரு

எள்ளு என்பதற்கு முன்னே, எண்ணெய் எங்கே என் கிறான்.
எள்ளு குறுணி, எலி மூக்கு குறுணி.
எள்ளுக்காய் பிளந்த விவகாரம்.
எள்ளுக்காய் பிளந்தாற்போல் பேசவேண்டும்.
எள்ளுக்காய் முள்ளுத் தெறிப்பதுபோல்.
எள்ளுக்கு ஏழு உழவு உழுகிறவேளை வேளாளா! கொள் ளுக்கு ஓர் உழவு உழுது பயிர் செய்.
எள்ளுக்கு ஏழு உழவு, கொள்ளுக்கு ஓர் உழவு.
2690 எள்ளுக்குத் தக்க எண்ணெய், எள்ளுக்குத் தக்க பிண்ணாக்கு.

எள்ளுக்குப் புள்ளுவரும், எச்சிற்கு எறும்பு வரும்.
எள்ளுக்குள் எண்ணெய் போல்.
எள்ளுக்குள் எண்ணெய் போல் எங்கும் நிறைந்திருக்கும்.
எள்ளுடன் ஏதோ காயி தென்பார்கள்.
எள்ளுதான் எண்ணெய்க்கு உலருகிறது, எலிப் பிழுக்கை என்னத்துக்கு உலருகிறது?
எள்ளுப் போட்டால், எள்ளெடுக்கப் போகாது.
எள்ளும் கரும்பும் இறுக்கினால் பயன் தரும்.
எள்ளும் தண்ணீரும் கரத்திலேந்திச் சொல்லுகிறாய்.
எள்ளும் தண்ணீரும் விட்டுத் தத்தம் பண்ணிவிட்டேன் (கை கழுவினேன்.)
2700 எள்ளும் பச்சை அரிசியும்போல் இருக்கவேண்டும்.

எள்ளு விழுந்தால் எடுக்க மகாசேனை, இடறி விழுந்தால் எடுக்க மனிதர் இல்லையே.
எள்ளை நீக்கிக் கொண்டுவரப்போன பேய், எண்ணெய் கொண்டுவர இசைந்தது போல்.
எறிகிறது முயலுக்குப், படுகிறது பற்றைக்கு.
எறிவார் கையிலே கல்லைக் கொடுக்கிறதா?
எறிவானேன் சொறிவானேன்?
எறும்பின் கண் அதன் அளவுக்குப் பெரிது, ஆனையின் கண் அதன் அளவுக்குச் சிறிது.
எறும்பின் கண்ணுக்கு எருமை மூத்திரம் ஏகப் பெரு வெள்ளம்.
எறும்பு ஊர இடங்கொடுத்தால் எருதும் பொதியும் உள்ளே நுழையும்.
எறும்பு ஊரக் கல்குழியும் (தேயும்).
2710 எறும்பு எடுத்துப் போவதற்குத் தடியெடுத்து நிற்கிறது, பெரிய பூசணிக்காய் போகிறது தெரியாது.
எறும்பு எண்ணாயிரம் கோடிக்குத் தெரியும்.
எறும்பு கடிக்கப் பொறுக்காதா?
எறும்புக்குக் கொட்டாங்கச்சித் தண்ணீர் சமுத்திரம்.
எறும்புக்கும் தன் கையால் எண்சாண் உடம்பு.
எறும்புப் புற்றில் பாம்பு குடி கொள்வதுபோல.
எறும்பு முட்டை கொண்டு திட்டை ஏறின் மழைபெய்யும்.
எறும்புமுதல் எண்ணாயிரம் கோடிக்கும் தெரியும்; காப்பாற்றுகிற நாராயணன் என்னைக் காப்பாற்றமாட்டானா?
எறும்புமுதல் எண்ணாயிரம் கோடியும் அழுதது.
எறும்பும் தன் கையால் எண் சாண்.
2720 எனக்கு அட்டமத்துச் சனி.
எனக்கு ஊணும் இல்லை உறக்கமும் இல்லை.
எனக்குக் கட்டின லிங்கத்தைக் குழிப்பாக்கு விளையாடுவேன்.
எனக்குக் கொடுக்கிறதைக் கொடுத்தால் போகிறேன்.
எனக்குப் பாக்குப் பிடிக்கப் பார்க்கிறான்.
எனது நாட்கள் எல்லாம் ஊமை கண்ட கனாப்போல் ஆயின.
என் அப்பன் கூத்தாடி, எனக்கொன்றுந் தெரியாது பிச்சை போடு.
என் இளக்காரம், விளக்காய் எரிகிறது.
என் ஈரலைக் கருக்குஅரிவாள்கொண்டு அறுக்கிறது.
என் எச்சிலைக் கழுவி உன் சுத்தத்திலே வார்க்க.
2730 என் காரியம் எல்லாம், கந்தன் படைவீடாய்ப் போயிற்று.

என் குடிகெட்டதும் உன் குடிகெட்டதும் பொழுதுவிடிந்தால் தெரியும்.
என் குடுமி அவன் கையில் அகப்பட்டுக்கொண்டது.
என் கையிலே எலும்பு இல்லையா?
என் கை வெல்லம் தின்கிறதா?
என் சீட்டுக் கிழிந்து போனாலல்லவோ சாவு வரும்?
என் தோலைச் செருப்பாய்த் தைத்துப் போடுவேன்.
என் பிழைப்பு சிரிப்பாய்ச் சிரிக்கிறது தெருவிலே.
என்பேரில் தப்பிருந்தால், என்னை மொட்டை அடித்துக் கழுதைமேல் ஏற்றிக்கொள்.
என்பேரில் தப்பிருந்தால், சோட்டைக் கழற்றி அடியுங்கள்.
2740 என்னைத் தின்று சதையைக் கொடுத்து வளர்த்தான்.
என் மகள் வாரத்தோடே வாரம் முழுகுவாள், என் மருமகள் தீபாவளிக்குத் தீபாவளி முழுகுவாள்.
என் மருமகளுக்கு வேப்பெண்ணெயாம் தூக்கெண்ணெய், விளக்கெண்ணெயாம் தலைக்கெண்ணெய்.
என் முகத்திலே கரி தடவாதே (சாணி பூசாதே.)
என் முகத்திலே பவிசு இல்லை, கையிலே பணமில்லை.
என் முகத்தில் கரி பூசினயே.
என் முதுகுத்தோல் உனக்குச் செருப்பாய் இருக்கிறது.
என் வீட்டுக்கு வந்தால், என்ன கொண்டுவருகிறாய், உன் வீட்டுக்கு வந்தால் என்ன கொடுக்கிறாய்?
என்றுநின்றும் பொன்றுவர் ஓர் நாள்.
என்றும் இடிகுலைச்சல் எப்பொழுதும் நீங்குவதில்லை.
2750 என்றும் பயப்படுதலிலும், எதிரேபோதல் உத்தமம்.
என்றைக்கும் போடாத இலட்சுமி இன்றும் போடவில்லை, தினம் போடுகிற தேவடியாளுக்கு இன்றைக்கு என்ன கேடு வந்தது?
என்ன சொன்னாலும் என் புத்தி போகாது.
என்னடா ஒன்றொன்றாய்க் குருவிபோலக் கொறிக்கிறாய்?
என்னடா குச்சுக் கட்டிப் பேசுகிறாய்?
என்னடா கெட்டுப் போகிறாய் என்றால், இன்னமும் கெட்டுப் போகிறேன் பந்தயம் போடு என்கிறான்.
என்னடா சவுக்கங் கட்டிப் பேசுகிறாய்?
என்னடா தாதா, புரட்டாசி மாதம் முப்பதும் ஒரு கந்தாயமா?
என்னடி அம்மா தெற்கத்தியாள்! எந்நேரம் பார்த்தாலும்

என்ன தின்றாலும் அதற்கு மேலே நாலு பேரீச்சம் பழம் தின்ன எல்லாம் அடிபடும் (செரிக்கும்).

2760 என்ன மாயம் இடைச்சி மாயம், மோரோடு தண்ணீர் கலந்த மாயம்.

என்னவாய்ச் சொல்லி இதமாய் உரைத்தாலும், கழுதைக்கு உபதேசம் காதில் ஏறாது.

என்னாலான உப்புத் திருமஞ்சனம்.

என்னிலும் கதிகெட்டவன் என்னை வந்து மாலையிட்டான்.

என்னுடைய வீட்டுக்குப் பூவை வரப் பொன்னுந் தரும் பாச்சுது.

என்னைக் கண்டால் சணலுக்குள்ளே ஒளிக்கிறாய், என் பெண்சாதியைக் கண்டால் சட்டிக்குள்ளே ஒளிக்கிறாய்.

என்னைக் கெடுத்தது நரை, என் மகளைக் கெடுத்தது முலை.

என்னை நம்பாதே, தாலி வாங்காதே.

என்னைப் போல குரலும் என் அக்காளைப் போல ஒயிலும் இல்லை என்கிறதாம் கழுதை.

என்னை விடைந்தால் உன்னை விடைவேன் அம்மலாமா?

2770 ஏகமும் கெட்டவனே (செத்தவனே), ஏறடா பாடையிலே.

ஏகாதசிக்கு மா இடித்தாற் போல.

ஏகாதசித் திருடியை ஏற்றடா ரதத்தின் மேல்.

ஏகாதசி மரணம் துவாதசி தகனம்.

ஏகாதசி மரணம் முத்தியென்று நாக்கைப் பிடுங்கிக்கொண்டு சாகிறதா?

ஏகாதசி விரதம் என்று நாக்கைப் பிடுங்கிக் கொள்வார்களா?

ஏகாலி வாகனம் பொதி சுமந்தாற் போல.

ஏகோதிட்டக்காரனுக்குச் சபிண்டிக்காரன் சாட்சி.

ஏச்சிலும் பேச்சிலும் வல்லவனே.

ஏடாகூடக்காரனுக்கு வழி எங்கே என்றால், போகிறவன் தலைமேலே தான்.

2780 ஏடாகூடத்திற்கு வழி யெப்படி என்றால், போகிறவன் தலையில் பொத்தென்று அடித்தான்.

ஏடாகூடம் பேசினால், அசப்பை சூனியம் வைப்பேன்.

ஏடு அறியாதவன், பீடு பெறுதான்.

ஏட்டில் அடங்காது, எண்ணத் தொலையாது.

ஏட்டில் சர்க்கரையென் றெழுதி நக்கினால் தித்திக்குமா?

ஏட்டுச் சுரைக்காயோ வீட்டுச் சுரைக்காயோ?

ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு ஆகுமா?

ஏணிக் கொம்புக்குக் கோணற் கொம்பு போடலாமா?

ஏணி தோணி அண்ணாவி நார்த்தங்காய்.

ஏணியைத் தள்ளிப் பரண்மேல் ஏறலாமா?

2790 ஏணுக்குக் கோணும், ஏட்டிக்குப் போட்டியும்.

ஏணைக் கழிக்குக் கோணற்கழி வெட்டுகிறதா?
ஏண்டா (ஏன் அடா) கருடா சுகமா? இருக்கிற இடத்தில் இருந்தால் சுகம்.
ஏண்டா தம்பி இரகுநாதா, இதற்குள், வந்து புகுந்து கொண்டாய்.
ஏண்டா தென்ன மரத்தில் ஏறினாய் என்றால், கன்றுக் குட்டிக்குப் புல் பிடுங்க என்கிறான்; தென்ன மரத்திலே புல் ஏதடா என்றால், அதுதானே கீழே இறங்குகிறேன் என்கிறான்.
ஏண்டா பட்டப்பகலில் திருடுகிறாய்? என் அவசரம் உனக்குத் தெரியுமா?
ஏண்டா புளியமரத்தில் ஏறினாய் என்றால், பூனைக்குட்டிக்குப் புல் பறிக்க என்கிறான்.
ஏண்டா முடிச்சு அவிழ்க்கிறாய்? என் பசி உனக்குத் தெரியுமா?
ஏண்டி (ஏன் அடி) சிறுக்கி புல்லு ஆச்சா? ஒரு நொடிக்கு முன் கட்டாச்சே.
ஏண்டி பாட்டி மஞ்சள் குளித்தாய்? பழைய நினைப்பு அடா பேராண்டி.
2800 ஏண்டி பெண்ணே இளைத்தாய் குதிர்போல?
ஏண்டி பெண்ணே குந்தியிருக்கிறாய்? சோறு பற்றாமல்.
ஏண்டி பெண்ணே சோர்ந்திருக்கிறாய்? சோறு பத்தியம்.
ஏது பிரியம்? இல்லாதது பிரியம்.
ஏதும் அற்றவனுக்கு இரண்டு பெண்டாட்டி ஏன்?
ஏதென்று கேட்பாரு மில்லை, எடுத்துப் பிடிப்பாரு மில்லை.
ஏமாந்தால் நாமம் போடுவான், இளைப்பு ஒட்டவில்லை.
ஏய்த்தால் மதனியை ஏய்ப்பேன், இல்லாவிட்டால் பரதேசம் போவேன்.
ஏரி உடைகிறதற்கு முன்னே, அணைபோடவேண்டும்.
ஏரி நிறைந்தால் கரை கசியும்.
2810 ஏரி பெருகில் எங்கும் பெருக்கு.
ஏரி மிதந்தால் இடையணை மதியாது.
ஏரியின் நீரைக் கட்டுதல் அரிது, உடைத்தல் எளிது.
ஏரியின்மேல் கோபித்துக், கால் கழுவாமல் போனது போலும்.
ஏரியோடு பகைகொண்டு சௌசம் செய்யாதிருக்கிறதா?
ஏரியோ தண்ணீர், சூரியதேவா?
ஏருழுகிறவன் இளப்பமானால், எருது மச்சான்முறை (மைத்துனம்) கொண்டாடும்.
ஏரை அடித்தேனோ கூழை அடித்தேனோ?

ஏர் உழுகிறபிள்ளை இளைத்துப் போகிறது, பரியம்போட்ட பெண்ணைப் பார்த்துவளர்.
ஏர் ஓட்டுவதினும் எரு இடுதல் நன்று.
2820 ஏர் நடந்தால் பேர் நடக்கும்.
ஏர் பிடித்தவன் என்னசெய்வான்? பானை பிடித்தவள் பாக்கியம்.
ஏர் பிடித்தவன் ஏழை, பானை பிடித்தவள் பாக்கியம்.
ஏலவே தொலைந்தது எங்களைத் தொட்டகன்மம்.
ஏலேலசிங்கன் பொருள் ஏழுகடலிற் போனாலும் திரும்பும்.
ஏலேலம்! ஏலேலம் எருமைச் சாணி காய்கிறது.
ஏவற்பேய் கூரையைப் பிடுங்கும்.
ஏவுகிறவனுக்கு வாய்ச்சொல், செய்கிறவனுக்குத் தலைச்சுமை.
ஏழாம் பொருத்தம்.
ஏழாயிரம் பொன் பெற்ற குதிரை இறப்பைப் பிடுங்குகையில் குருட்டுக்குதிரை கோதுமை ரொட்டிக்கு வீங்
2830 ஏழு அறைகட்டி அதில் வைத்தாலும், ஒரு தாழறையில் சோரம்போவாள்.
ஏழை அடித்தேனோ கூழை அடித்தேனோ.
ஏழை என்றால் எவர்க்கும் எளிது.
ஏழைக்கும் பேழைக்கும் காடுகாள் அம்மை.
ஏழைசொல் அம்பலம் ஏறாது.
ஏழை பாக்குத் தின்ன, எட்டுவீடு அறியவேண்டுமா?
ஏழைப் பிள்ளைக்குத் தெய்வமே (எவர்களும்) துணை.
ஏழையைக் கண்டால் மோழையும் பாயும்.
ஏளிதம்பேசி இவ்வேடம் ஆனேன்.
ஏற ஆசைப்பட்டால் சாணாரப்பிறவி வேண்டும்.
2840 ஏற ஒன்று இறங்க ஒன்று, எனக்கொன்று உனக்கொன்று, இன்னொன்றிருக்குது தந்தால் தா, தீராவிட்டால் போ.
ஏறச்சொன்னால் எருதுக்குக் கோபம், இறங்கச்சொன்னால் நொண்டிக்குக் கோபம்.
ஏறப்படாத மரத்திலே எண்ணப்படாத மாங்காய்.
ஏறவிட்டு ஏணியை வாங்கினாற்போல.
ஏறாத் வார்த்தை வசையோடொக்கும்.
ஏறிய கொக்கென்று இருந்தையோ கொங்கணவா?
ஏறின கொம்பால் இறங்கவேண்டும்.
ஏறினால் எருதுக்குக் கோபம், ஏறாவிட்டால் நொண்டிக்குக் கோபம்.

ஏறுகிற குதிரையிலும் உழவுமாடு அதிக உத்தமம்.
ஏறுகிறவன் சூத்தை எத்தனை தூரம் தாங்கலாம்?
2850 ஏறு நெற்றி சூறுதலை எதிர்க்கவந்தால் ஆகாது.
ஏறுமாறாய்ப் பேசுகிறதா?
ஏறும் தேமல் இறங்கும் படர்தாமரை கூடும்புருவம் குடியைக் கெடுக்கும்.
ஏற்கனவே மாமி பேய்க்கோலம், அதிலும் கொஞ்சம் மாக்கோலம்.
ஏற்கனவே வருகிற விக்கினங்களைத் தடுக்கவேண்டும்.
ஏற்றக்கோலுக்குப் பிடித்தால் அரிவாட்பிடிக்கு வரும்.
ஏற்றப் பாட்டுக்கு எதிர்ப்பாட் டில்லை.
ஏனவாயனைக் கண்டாளாம், ஏணிப்பந்தம் பிடித்தாளாம்.
ஏன் என்பாரும் இல்லை, எடுத்துப்பார்ப்பாரும் இல்லை.
ஏன் காணும் தாதரே ஆண்டிபுகுந்தீர்? இதுவுமொரு மண்டலம் பார்த்துவிடுவோம்.
2860 ஏன் கொழுக்கட்டை சவுக்கிட்டாய்? ஒருகாசு வெல்லம் இல்லாமல் சவுக்கிட்டேன்.
ஏன் பறையா என்கிறதை விட, வள்ளுவப்பறையா என்

ஐங்கலக் கப்பியில் நழுவின கப்பி.
ஐங்காதம் போனாலும் அகப்பை அரைக்காசு.
ஐங்காதம் போனாலும் அறிமுகம் வேண்டும்.
ஐங்காதம் போனாலும் தன் பாவம் தன்னோடே.
ஐங்காயம் இட்டு அரைத்துக்கரைத்தாலும் தன் நாற்றம் போகாதாம் பேய்ச்சுரைக் காய்க்கு.
ஐதுநெல் அடர்ந்தது சுற்றம்.
ஐந்து சிட்டுக்கு, இரண்டு காசு விலை.
ஐந்துதரம் ஈரடிகளையும் ஒருங்கே எடுத்துவைத்தல்.
2870 ஐந்து வயதில் ஆதியை ஓது.
ஐந்து விரலும் ஐந்து கன்னக்கோல்.
ஐப்பசிக்கும் கார்த்திகைக்கும் மழை இல்லாவிட்டால், அண்ணனுக்கும் சரி, தம்பிக்கும் சரி.
ஐப்பசிமாதத்து எருமைக்கடாவும் மார்கழி மாதத்து நம்பியானும் சரி.
ஐப்பசி மாதத்து வெயிலில், அன்று உரித்த தோல் அன்று காயும்.
ஐப்பசிமாதம் அழுகைத்தூற்றல், கார்த்திகைமாதம் கனத்த மழை.

ஐம்பதிலே அறிவு, அறுபதிலே அடக்கம், அறுபதுக்குமேல் ஒன்று மில்லை.
ஐம்பது வயதானவனுக்கு ஐந்துவயதுப் பெண்ணா ?
ஐயங்காரும் தொத்துக் கொடுப்பார்.
ஐயப்பட்டால் பைய நட.
2880 ஐயப்பன் குதிரையை வையாளி விட்டகதை.
ஐயப்பா கையை விடு.
ஐயமான காரியத்தைச் செய்யல் ஆகாது.
ஐயம் ஏற்றும் அறிவே ஒது.
ஐயம் தீர்ந்தும் நெஞ்சாறவில்லை.
ஐயர் இடங்கொடுத்தாலும், அடியார்கள் இடங்கொடார்கள்.
ஐயர் என்பவர் துய்யர் ஆவர்.
ஐயர் கொண்டுவருகிற பிச்சைக்கு அறுபத்தாறு பை.
ஐயர் வருகிறவரையில் அமாவாசை நிற்குமா ?
ஐயனாரே வாரும், கடாவைக் கொள்ளும்.
2890 ஐயனார் கோவிலிலே ஆனை பிடிக்கவேண்டும்.
ஐயனார் கோவில் செங்கல் அத்தனையும் தெய்வம்.
ஐயனார் கோவில் மண்ணை மிதித்தவர் அத்தனை பேரும் பத்திரகாளி.
ஐயனார் படையில் குயவனார் பட்டதுபோல.
ஐயன் அமைப்பை ஆராலும் தள்ளக்கூடாது.
ஐயா கதிர்போல அம்மா குதிர்போல.
ஐயாவுக்கு வித்தையில்லை அம்மாளுக்குக் கருவமில்லை.
ஐயோ என்றால் ஆறுமாசத்துப் பாவம் சுற்றும்.
ஐவர்க்கும் தேவி அழியாத பத்தினி.

ஒக்கப்பிறந்த தங்கை ஓலமிட்டழச்சே, ஒப்பாரித் தங்கைக்குச் சிற்றாடையாம்.
2900 ஒச்சியம் இல்லாத ஊரிலே பெண்வாங்கின கதை.
ஒடிந்த கோல் ஆனாலும், ஊன்றுகோல் ஆகும்.
ஒடுக்கம் சிதம்பரம்.
ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள் போடு.
ஒட்டி உணர்ந்து உருவினகோல் போல்.
ஒட்டி உணர்ந்து ஊமத்தங்காயாய்ப் போய்விட்டான்.
ஒட்டிக்கொண்டு வந்தாலும் தட்டிக் கழிக்கிறான்.
ஒட்டிய சீதேவி நெட்டியோடே போம்.
ஒட்டினாலும் உழக்குப் பீர்ச்சென்கிறதா ?
ஒட்டினால் தொட்டிலும் கொள்ளும், ஒட்டாவிட்டால் கட்டிலும் கொள்ளாது.
2910 ஒட்டுத்திண்ணை நித்திரைக்கேடு.

ஒட்டைக்குச் சளுவுபட்டாற்போல.
ஒட்டைக்குப் பளுவு ஏற்றுகிறதுபோல.
ஒண்டவந்த எலி உரம்பெற்றது, அண்டியிருந்த பூனை ஆலாய்ப் பறக்கிறது.
ஒண்டவந்த பிடாரி ஊர்ப்பிடாரியைத் துரத்தினதுபோல.
ஒண்டிக்காரன் பிழைப்பும் வண்டிக்காரன் பிழைப்பும் ஒன்று.
ஒதிபெருத்தால் உரலாமா?
ஒதிபெருத்து என்ன, உபகாரம் இல்லாதவன் வாழ்ந் தென்ன?
ஒதிபெருத்துத் தூணுமா?
ஒதியமரமும் சமயத்துக் குதவும்.
2920 ஒதியமரம் தூணுமோ, ஓட்டாங்கிளிஞ்சல் காசாமோ (துட்டாமோ)?
ஒத்திவெள்ளம் வருமுன்னே அணைகோலிக் கொள்ள வேண்டும்.
ஒயிலாய்ப் பேசுகிறான், ஆனால் கனமறிந்த தப்பறையுமல்ல கண்டறிந்த நாயுமல்ல.
ஒய்யாரக் கொண்டையாம் தாழம் பூவாம், உள்ளே இருக்கு மாம் ஈரும் பேனும்.
ஒரு அச்சிலே உருக்கிவார்த்தாற்போல.
ஒரு அடி அடித்தாலும் பட்டுக்கொள்ளலாம், ஒரு சொல் கேட்கமுடியாது.
ஒரு இழவு என்றால் உள்ளபடி ஆகும்.
ஒரு உரையிலே இரண்டு கத்தியா?
ஒரு ஊரிலே இரண்டு பைத்தியக்காரனா?
ஒரு ஊருக்கு ஒரு வழியா?
2930 ஒரு ஊர் நடப்பு ஒரு ஊருக்குப் பழிப்பு.
ஒரு கட்டு வைக்கோலைத் தண்ணீரிற் போட்டு ஒன்பது ஆள் கூடி இழுத்தாற் போல.
ஒரு கண்ணிலே புகுந்து ஒரு கண்ணிலே வருகிறவன்.
ஒரு கண்ணிலே வெண்ணெய் தடவிக்கொண்டு ஒரு கண்ணிலே சுண்ணாம்பு தடவிக்கொண்டு பார்க்கிறது போல.
ஒரு கண்மூடி ஒரு கண் விழிக்கிறவன்.
ஒரு கண்மூடி ஒரு கண் விழித்தல்.
ஒரு கம்பத்தில் இரண்டு ஆனை கட்டுகிறதா?
ஒரு கரண்டி எண்ணெய் கொண்டு பலகாரஞ் சுட்டுப் பந்தி விசாரித்து வந்த பெண்டுகள் வாரி முடித்து, பெண்டு களால் பிடிமான மில்லாமல் புறக்கடை வழியாய்ப் போய்

ஒரு கழிச்சலில் உட்கார்ந்து மறு கழிச்சலில் மல்லாந்து போக.
ஒரு காசு அகப்படுகிறது குதிரைக் கொம்பு.
2940 ஒரு காசு என்ற இடத்தில் அழுகிறாள்.
ஒரு காசு கொடாதவன் ஒரு வராகன் கொடுப்பானா?
ஒரு காசு பேணின் இரு காசு தேறும்.
ஒரு காற் செய்தவன் இருகாற் செய்வான்.
ஒரு குடம் பாலுக்கு ஒரு துளி பிரை.
ஒரு குண்டிலே கோட்டை பிடிக்கலாமா?
ஒரு குருவி இரையெடுக்க ஒன்பது குருவி வாய்!
ஒரு குளப்படி நீரைக் கண்டு திரைகடல் எங்குமா?
ஒரு கூடு (கூண்டு) முடைந்தவன் ஒன்பது கூடு முடைவான்.
ஒரு கூடை கல்லும் தெய்வமானால், கும்பிடுகிறது எந்தக் கல்லை?
2950 ஒரு கூடை செங்கல்லும் பிடாரியா யிருக்கிறது.
ஒருகை தட்டினால் ஓசை எழும்புமா?
ஒருகை தட்டினால் ஓசை கேட்குமா, இருகை தட்டினால் ஓசை எழும்புமா
ஒருகை முழம் போடுமா?
ஒரு கோபம் வந்து கிணற்றில் விழுந்தால், ஆயிரம் சந்தோஷம் வந்தாலும் எழும்பலாமா?
ஒரு கோழுட்டியைக் கழுவில் போட்டதற்கு ஒன்பது கலவெள்ளாச்சுதே, ஊர்க்கோமுட்டிகளை யெல்லாம் கழுவில் போடென்றானும்.
ஒரு சட்டியிலே இரண்டு தைலம்.
ஒருசந்திப் பானையை நாய் அறியுமா?
ஒரு சாண் காட்டிலே ஒரு முழத்தடி வெட்டலாமா?
ஒரு சுருட்டுப் பத்து நாள் பிடிப்பேன்.
2960 ஒரு சுற்றுச் சுற்றி, வயிற்றைத் தடவிப் பார்த்துக்கொண்டது போல.
ஒரு செடியிலே விளைந்தாற்போல.
ஒரு செவியில் வார்த்தாற்போல.
ஒரு தரம் விழுந்தால் தெரியாதா?
ஒரு தலைக்கு இரண்டு ஆக்கினையா?
ஒருதலை வழக்கு நூலிலும் செவ்வை.
ஒரு தாய் அற்றவர்க்கு ஊரெல்லாம் தாய்.
ஒரு துட்டு ஒரு ரூபாயா யிருக்கிறது.
ஒரு துரும்பும் பழுதையாகுமா?

ஒருத்தர் போனவழி ஒருத்தர் போகிறதில்லை.
2970 ஒருத்தன் சோலிக்குப் போகவுமாட்டேன், என்காலை மிதித்தால் விடவுமாட்டேன்.
ஒரு நன்றி செய்தவரை உள்ள அளவும் நினை.
ஒருநாட் கூத்துக்குத் தலையை (மீசையை)ச் சிரைத்தது போல்.
ஒரு நாளாகிலும் திருநாள்.
ஒருநாளு மில்லாத திருநாள்.
ஒரு நாளும் சிரிக்காதவள் திருநாளிலே சிரித்தாள், திருநாளும் வெறுநாளாயிற்று.
ஒரு நாளைக்கு இறக்கிறது கோடி, பிறக்கிறது கோடி.
ஒரு நாள் ஒரு யுகமா யிருக்கிறது.
ஒரு பணம் கொடுத்து அழச்சொல்லி, ஒன்பது பணம் கொடுத்து ஓயச்சொன்னது போல.
ஒரு பணம் கொடுப்பானும் ஓயாமல் அழைப்பானும்.
2980 ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்.
ஒரு பிள்ளை பெற்றவளுக்கு உறியிலே சோறு, நாலு பிள்ளை பெற்றவளுக்கு நடுத் தெருவிலே சோறு (ஓடு).
ஒரு பிள்ளையும் பிள்ளையல்ல, ஒரு மரமும் தோப்பல்ல.
ஒரு பிள்ளை யென்று ஊட்டி வளர்த்தாளாம், அது செரியா மாந்தகுணம் பிடித்துச் செத்ததாம்.
ஒரு புத்திரன் ஆனாலும் குரு புத்திரன் சிலாக்கியம்.
ஒரு பெண் என்று ஊட்டி வளர்த்தாள், அது ஊர் மேலே போச்சுது.
ஒரு பொய்க்கு ஒன்பது பொய்.
ஒரு பொய்யை மறைக்க ஒன்பது பொய் சொல்லவேண்டும்
ஒரு பொருள் ஆகிலும் எழுதி அறி.
ஒருபொழுதுச் சட்டி, அதின்மேல் கவிச்சுச் சட்டி.
2990 ஒரு மரத்துக்கொம்பு ஒரு மரத்தில் ஒட்டாது.
ஒரு மரத்துப் பட்டை ஒரு மரத்தில் ஒட்டுமா?
ஒரு மரத்துப் பழமா ஒருமிக்க.
ஒரு மரம இரண்டு பாளை, ஒன்று நுங்கு ஒன்று கள்ளு; அறிவுடன் பார்க்கும்போது அதுவுங் கள்ளே இதுவும் கள்ளே.
ஒரு மனப்படு, ஓதுவார்க்கு உதவு.
ஒரு மிளகுக்கு ஆற்றைக்கட்டி இறைத்த செட்டி.
ஒரு மிளகும் நாலு உப்பும் போதும்.
ஒரு முருங்கையும் ஒரு எருமையும் உண்டானால், வருகிற விருந்துக்கு மனங்களிக்கச் செய்வேன்.

ஒரு முழுக்காய் முழுங்கி விடவேண்டும்.
ஒரு முழுக்கிலே மண் எடுக்க முடியுமா?
3000 ஒரு முழுக்கிலே மண் எடுக்கிறதா?

ஒருமைப்பாடு இல்லாத குடி ஒருமிக்கக் கெடும்.
ஒருவருக்கு நிறைவும் குறைவும் ஊழ்வினைப் பயன்.
ஒருவரும் அறியாத உச்சித நாமன்.
ஒருவர் அறிந்தால் இரகசியம், இருவர் அறிந்தால் அம்பலம்.
ஒருவர்க் கிடுக்கண்வந்தால் அடுக்கடுக்காய் வரும்.
ஒருவனாய்ப் பிறந்தால் தனிமை, இருவராய்ப் பிறந்தால் பகைமை.
ஒருவனாய்ப் பிறப்பது பிறப்பாமா?
ஒருவனுக்கு இருவர் துணை, ஒருவனை அறிய இருவர் வேண்டும்.
ஒருவனுக்குத் தாரம் மற்றவனுக்குத் தாய்.
3010 ஒருவனைக் கொன்றவன் உடனே சாவான், பலரைக் கொன்றவன் பட்டமாளுவான்.

ஒருவன் அறிந்த இரகசியம் உலகத்தில் பரவும்.
ஒருவன் குழியிலே விழுந்தால் எல்லாரும்கூடி அவன் தலையிலே கல்லைப் போடுகிறதா?
ஒருவன் தலையில் மாணிக்கம் இருக்கிறதென்று வெட்டலாமா?
ஒரு விரல் நொடி இடாது.
ஒரு வீட்டடங்கலும் பிடாரி (பஜாரி).
ஒரே காலிலே இருக்கிறான்.
ஒலியிருந்த கட்டி இன்ன கட்டி என்று தெரியாது.
ஒவ்வாக் கூட்டிலும் தனிமை அழகு, ஒவ்வாப் பேச்சு வசையோடு ஒக்கும்.
ஒழுகாத வீடு உள்ளங்கை அத்தனை போதும்.
3020 ஒழுக்குக்கு வைத்த சட்டி போல.

ஒழுக்கு வீட்டிலே வெள்ளம் வந்தது போல.
ஒழுங்கு ஒருபணம், சளுக்கு (டம்பம்) முக்காற்பணம்.
ஒளிக்கப் போயும் இடம் இடைஞ்சலா?
ஒளிக்கப் போயும் தலையாரி வீட்டிலா?
ஒளிக்கும் சேவகனுக்கு முகத்தில் மீசை ஏன்?
ஒளி யில்லாவிட்டால் இருளையும், இருள் இல்லாவிட்டால் ஒளியையும் காணலாம்.
ஒள்ளியர் தெள்ளியர் ஆயினும், ஊழ்வினை பைய நுழைந்து விடும்.
ஒற்றியும் சீதனமும் பற்றி ஆளவேண்டும்.

ஒற்றைக்காலும் ஓரியுமாய்ச் சமுசாரஞ் செய்கிறான்.
3030 ஒன்றவந்த பிடாரி ஊர்ப்பிடாரி ஆனதுபோல்.
ஒன்றவந்த பிடாரி ஊர்ப்பிடாரியை ஓட்டினதுபோல்.
ஒன்றால் ஒன்று குறையில்லை, முன்னாலே கட்டத் துணியில்லை.
ஒன்றான தெய்வம் உறங்கிக் கிடக்கும்போது, பிச்சைக்கு வந்தவன் ததியோதனத்திற்கு அழுகிறானாம்.
ஒன்றான தெய்வம் ஒதுங்கிக் கிடக்கச்சே, மூலைவீட்டுத் தெய்வம் குங்குலியம் கேட்குமாம்.
ஒன்றி மரம் தோப்பாமா?
ஒன்று ஒன்றாய் நூறா, ஒருமிக்க நூறா?
ஒன்றுகொண்டு எட்டுவிற்றால், லாபமே லாபம்.
ஒன்றுக்கு வாங்கி எட்டுக்கு விற்றால் லாபமே லாபம்.
ஒன்று தெரிந்தவனுக்கு எல்லாம் தெரியாது.
3040 ஒன்று நினைக்க ஒன்றாயிற்று.
ஒன்றும் அறியாளாம் கன்னி, ஓடிப்பிடித்ததாம் ஆறுமாத சன்னி.
ஒன்றும் அற்ற தங்காளுக்கு ஒன்பது நாள் சடங்கா?
ஒன்றும் அற்ற நாரிக்கு ஒன்பது நாள் சடங்கு, அதுவும் அற்ற நாரிக்கு ஐம்பது நாள் சடங்கு.
ஒன்றும் இல்லையென்று ஊதினான், அதுதானும் இல்லையென்று கொட்டினான்.
ஒன்றே குதிரை ஒன்றே ராவுத்தன்.
ஒன்றே ராஜா ஒன்றே குதிரை.
ஒன்றைத் தொடினும் நன்றைத் தொடு.
ஒன்றைப் பத்தாகவும், பத்தை ஒன்றாகவும் சாதிக்கிறான்.
ஒன்றைப் பிடித்தாற் சாதிக்கவேண்டும்.
3050 ஒன்றைப் பெற்றாலும் கடுகப் பெறு.
ஒன்றைப் பெற்றாலும் கன்றைப் பெறு.
ஒன்றைப் பெற்றால் நன்றே பெறவேண்டும்.
ஓகுடுப்பானுக்கு வாழ்க்கைப்பட்டு ஓட்டமே ஒழிய நடை இல்லை.
ஓங்கி அறைந்தால் ஏங்கி அழச் சீவனில்லை.
ஓங்கில் அறியும் உயர் கடலின் ஆழம், பாங்கி அறிவாள் தன் பர்த்தாவின் வலிமை.
ஓசை காட்டிப் பூசை செய்.
ஓசை பெறும் வெண்கலம், ஓசைபெறா மண்கலம்.
ஓட மருந்துண்டு உறங்கி விழுந்தாயோ?
ஓடம் கடந்தால் ஓடக்காரனுக்கு ஒரு சொட்டு.
3060 ஓடம் கட்டின தூலம்.

ஓடம் வண்டியிலும் வண்டி ஓடத்திலும்.
ஓடம்விட்ட ஆறும் அடி சுடும்.
ஓடம் விட்ட இடம் அடி சுடும், அடி சுட்ட இடம் ஓடம் விடப்படும்.
ஓடம்விட்டு இறங்கினால் ஓடக்காரனுக்கு ஒருசொட்டு.
ஓடவும் மாட்டான் பிடிக்கவும் மாட்டான், ஓயாமல் பேசுவான்.
ஓடவும் மாட்டேன், பிடிக்கவும் மாட்டேன்.
ஓடி ஒருகோடி தேடுவதிலும், இருந்து (உட்கார்ந்து) ஒரு காசு தேடுவது நலம்.
ஓடி ஒன்பது பணம் சம்பாதிப்பதிலும் உட்கார்ந்து ஒரு பணம் சம்பாதிப்பது நன்று.
ஓடி ஓடி உள்ளங்காலும் வெளுத்தது.
3070 ஓடி ஓடிப் பறந்தாலும் ஓடக்காரன் தாமதம்.

ஓடிப் போகிறவன் பாடிப் போகிறான்.
ஓடிப்போன ஊரில் ஆதரித்தவன் கவுண்டன்.
ஓடிப்போன புருடன்வந்து கூடிக்கொண்டான், உடைமை மேல் உடைமைபோட்டு மினுக்கிக்கொண்டாள்.
ஓடிப்போன முயல் பெரிய முயல் அல்லவோ?
ஓடிப்போனவனுக்கு ஒன்பதாமிடத்திலே ராஜா, அகப்பட்டவனுக்கு அட்டமத்திலே சனி.
ஓடியம் ஆகிலும் ஊடுருவக் கேள்.
ஓடியும் கிழவிக்குப் பிறகேயா?
ஓடிருக்கிறது நாடிருக்கிறது.
ஓடிருக்கிறது நானிருக்கிறேன்.
3080 ஓடுகிற கழுதையை வாலைப்பிடித்தால் உடனே கொடுக்கும் பலன் (உதை).

'ற பாம்பைக் கையினால்பிடித்து, உண்கிறவாயில் மண்ணைப் போட்டுக்கொள்ளுகிற காலம்.
ஓடுகிற பாம்பைக் கையினாற்பிடிக்கிற பருவம் (வயது).
ஓடுகிறவனைக் கண்டால் துரத்துகிறவனுக்குத் தொக்கு (இலேசு).
ஓடுகிறவனை விரட்டுகிறது உலகு.
ஓடுகிற வெள்ளம் அணையில் நிற்குமா?
ஓட்டத்துக்குப் பாக்குப் பிடிக்கிறான்.
ஓட்டைக் கப்பலுக்கு ஒன்பது மாலுமி.
ஓட்டைக் குடத்திலேதான் சர்க்கரையிருக்கும்.
ஓட்டைச் சங்கால் ஊத முடியாது.
3090 ஓட்டைச் சட்டியானாலும் கொழுக்கட்டை வெந்தால் சரி.

